வெளியீடு எண் 335.

திருவாவடுதுறை ஆதீனமுனிவர்

# ஸ்ரீமத் சிவஞானயோகிகள் புகழ்மாலை

திருவாவடுதுறை ஆதீனம்
1984

வெளியீடு எண் 335.

உ
சிவமயம்

திருவாவடுதுறை ஆதீனமுனிவர்

# ஸ்ரீமத் சிவஞானயோகிகள் புகழ்மாலை

இது
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள்
அருளாணையின்வண்ணம்
வெளியிடப்பெற்றது.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்
200-வது குருபூஜைவிழாமலர்
8 — 5 — 84

திருவாவடுதுறை ஆதீனம்
வள்ளுவராண்டு 2015. மெய்கண்டார் ஆண்டு 762.
1984

சிவமயம்

# முகவுரை

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
        புயங்கன் தாளே புந்திவைத்திட்டு;
இகழ்மின் எல்லா அல்லலையும்;
        இனிஓர் இடையூறு அடையாமே,
திகழும் சீரார் சிவபுரத்துச்
        சென்று, சிவன்தாள் வணங்கி, நாம்
நிகழும் அடியார் முன்சென்று,
        நெஞ்சம் உருகி நிற்போமே.

— திருவாசகம்.

ஒருவரிடம் ஒன்றைப் பெறவிரும்பினால் அவர்களைப் புகழ்ந்து கூறுதல் உலகியல்பு. அங்ஙனங்கூறினும் கொடுக்கும் மனம் அவர்களுக்கு இன்மையால் கேட்டபொருளைப் பெற முடியவில்லை. அதனால்தான் 'தம்மையே புகழ்ந்து இச்சைபேசி னும் சார்வினும் தருகிலாப் பொய்ம்மையாளரைப் பாடாதே' என்று அவர்களைப் பொய்ம்மையாளர்வரிசையில் வைத்துச் சொல்லி, அடுத்து யாரைப் புகழவேண்டும் என்பதை 'எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்' என்றபகுதியால் சுந்தரர் நமக்கு அறிவிக்கின்றார். ஆகவே உயர்ந்த பண்புகள் இல்லாதவரை இருப்பவராகக் கருதிப் போற்றாது, அப்பண்புகளனைத்தும் ஒருசேர நிறைந்த மெய்ம்மையாளரைப் புகழ்ந்து போற்றின் நிலையுடைய நலம் பெறலாம். அத்தகைய மெய்ம்மையாளர் வரிசையில் எண்ணத்தக்க பெருந்தவமுனிவர் ஸ்ரீ சிவஞான சுவாமிகள். இவர்களிடத்தில் உண்மையன்புகொண்டு, புகழ்ப் பாடல்களை ஓதிப்போற்றினால் இன்பவாழ்வு பெறலாம்.

திருவாவடுதுறை ஆதீன முனிவர்களுள் முதன்மையாக விளங்கிய இவர்கள் இயற்றிய நூல்கள் பலவாம். ஆயினும் சிவஞானபோதப் பேருரை குன்றிலிட்ட விளக்குப்போல இவர்கள் புகழொளியை எங்கும் வீசிநிற்கிறது. அப்பேருரை இவர்கள் பெயராலேயே 'சிவஞானபோத மாபாடியம்' எனப் போற்றப்பெறுகிறது. இவர்களும் 'ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்' எனவும், 'ஆதீனகுலதெய்வம்' எனவும் பாராட்டப் பெறுகிறார்கள். சுருங்கச்சொன்னால் கற்றோர்க்குத் தாம்

வரம்பாகிய பேரறிஞர்களும் இவர்கள் திருப்பெயரைச் சொல்லாமல், 'சுவாமிகள்' என்றே சிறப்பாகக் குறிக்கும் வழக்கம் இத்தவமுனிவரின் பெருமைக்கு எடுத்துக்காட்டாகும்.

சுவாமிகள்மீது பாடப்பெற்ற புகழ்ப்பாடல்கள் சிறுசிறு தொகுதியாகவும் முழுதும் சேர்ந்தும் மூன்று பதிப்புக்கள் ஆதீனத்தில் முன்பு வெளியிடப்பெற்றுள்ளன. இப்போது, ஆதீனத்து முனிவர்களும் மற்றுமுள்ள ஆதீனப்புலவர்கள் உள்ளிட்ட அறிஞர்களும் சுவாமிகள்மீது பாடியுள்ள தனிப் பாடல்களும் சிற்றிலக்கிய நூல்களுமாக இதுவரை கிடைத்துள்ள புகழ்ப்பாடல்களை ஒருசேரத்தொகுத்துப் புகழ்மாலையாக வெளியிடப்பெறுகிறது.

விக்கிரமசிங்கபுரத்தில் அவதரித்துத் துறவுபூணும் அவா உடையவராய்த் துறைசை ஆதீனத்தைச்சார்ந்து தவம்மேற்கொண்டு பெரும்புகழ்பெற்று விளங்கிய சுவாமிகளின் புகழ்ப் பாடல்களை, அப்புண்ணியத் தலத்திலேயே தோன்றித் துறவுள்ளத்தோடு துறைசையைச்சார்ந்து ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் நல்லருளால் இப்போது இருபத்து மூன்றாவது ஞானபீடத்தில் எழுந்தருளியிருந்து அருளரசு நடாத்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் வெளியிட்டு வழங்கும் திருவருட்டிறம் எண்ணியெண்ணி வியந்து போற்றுதற்கு உரியதாகும்.

ஸ்ரீமத் சுவாமிகள் சிவானந்தப்பேறெய்திய சித்திரை ஆயிலியத் திருநாளன்று வெளிவரும் இப்புகழ்மாலையை அன்பர்கள் ஏற்று, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் கருணையை நினைந்து, பாடல்களை ஓதி, நீடுலகில் நிலையுடைய பெருஞ்செல்வம் எய்தி என்றும் இன்பம் பெறுவார்களாக.

*திருவாவடுதுறை,*
*24—4—84.*

*வித்துவான் மு. ஆறுமுக தேசிகர்,*
*ஆதீன நூலகர்.*

# பொருளடக்கம்

## ஸ்ரீ சிவஞானசுவாமிகள் வரலாற்றுச் சித்திரம்



ஸ்ரீ ஆனந்தக்கூத்தர் தம் ஒரே புதல்வராகிய ஸ்ரீ முக்களாலிங்கரை (ஸ்ரீமத் சிவஞானசுவாமிகளை) சைவம் தழைக்கவும், உலகு நலம்பெறவும் துறைசை ஆதீனத் தம்பிரான்களிடத்தில் ஒப்படைத்தல்.



திருஆலவாய் அண்ணல் முன்னர் தருமியெனும் ஏழை
அந்தணர்க்கு ஒரு பாடல் எழுதிக்கொடுத்து ஸ்ரீ செண்பகப்
பாண்டியனிடத்தில் பொற்கிழி வாங்கிக் கொடுத்ததுபோல்,
திருப்பாதிரிப்புலியூரில் ஏழை அந்தணர் ஒருவர் பொற்கிழி
பெற்று வறுமையைப் போக்கிக்கொள்ள ஸ்ரீமத் சிவஞான
சுவாமிகள் 'வரையேற விட்டமுதம்' என்று
தொடங்கும் பாடலை எழுதிக்கொடுத்தல்.



ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி சந்நிதியில் 11-ஆவது குருமகா சந்நிதானம ஸ்ரீ-ல-ஸ்ரீ பின்வேலப்பதேசிக சுவாமிகள் முன்னிலையில் ஸ்ரீமத் சிவஞானசுவாமிகள் சிவஞானபோத திராவிட மகாபாடியத்தை அரங்கேற்றுதல்.

உ
சிவமயம்

## திருவாவடுதுறை ஆதீனமுனிவர்

# ஸ்ரீமத் சிவஞானயோகிகள் புகழ்மாலை

## தனிப்பாடல்களும் கீர்த்தனையும்

(ஸ்ரீமத் மதுரகவி சுப்பிரமணியமுனிவர் இயற்றியது)

## தனிப்பாடல்

கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினில்என்றும் உன்னிவைத்தே உரைப்பாம். (1)

திண்ணஇன்பச் சேவடியும் திருவிழியும்
திருமார்பும் செல்வக் கையும்
நண்ணும்அன்பர்க் கருள்கருணைத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணியத்தின் பொலிவாகி அற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புலைநா யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே. (2)

ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலாம்
உற்றபே ராகரமதாய்
ஓங்குதிரு வாவடு துறைப்பதியில் அற்புதத்
தொருவடிவு கொண்டருளியே

பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகையாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேருவாகி
ஆதரித் தடியேங்கள் உண்ணத் தெவிட்டாத
அமிர்தசா கரமாகியே
அழகுபொலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதைமாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்நிதியிலோர்
மணிவிளக் கெனவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்குவாமே. (3)

## கீர்த்தனை

### பல்லவி

நினைத்தாற் சகிக்கப் போமோ—என் சுவாமியை
நினைத்தாற் சகிக்கப் போமோ.

### அநுபல்லவி

எனைத்தனி விட்ட கன்ற
எந்தைசிவ ஞான வாழ்வை (நினைத்தால்)

### சரணம்

1. கருணை முகத்தைக் காட்டிக்
கனிந்த மொழியைக் காட்டித்
தருண வடிவைக் காட்டித்
தனித்துவிட் டகன் றுரை (நினைத்தால்)

2. காவி யுடை யழகும்
கவினுர் வெண்ணீற் றொளியும்
பாவியேன் கண்ணிற் காட்டிப்
பரவீடு சேர்ந் தாரை (நினைத்தால்)

3. சிவவேடச் சேவை தந்தும்
திருவடி நீழல் தந்தும்
அவமேகை விட்டிங் கென்னை
அகன்றுரை நாடி அந்தோ (நினைத்தால்)

4. கலைஞானஞ் சிவ ஞானங்
கலந்தளித் தென்னை யாளும்
நிலையாரை என்னு யிராய்
நிறைந்துநின் றகன்றுரை (நினைத்தால்)

5. கருவிலென் னுேடி ருந்து
கருணையாய்க் கொண்டு வந்து
பெருவாழ்வில் வைத்த கன்ற
பேரரு ளாளரை நான் (நினைத்தால்)

6. கண்ணினு ளக லாரைக்
கருத்தினுள் வில காரரை
எண்ணி எண்ணித் தவிக்க
இங்ககன் றுரை ஐயோ (நினைத்தால்)

7. என்னுயிர் கவர்ந் தாரை
எனதெழில் கவர்ந் தாரை
மன்னு துயர்தந் தாரை
மறக்கவுங் கூட வில்லை (நினைத்தால்)

8. கண்டார்நெய் பால்க னிதேன்
கடலமு துங்க லந்து
கொண்டார்போல் நான் மகிழக்
கூடிப் பிரிந் தவரை (நினைத்தால்)

9. துணைபிரி யாவ னமே
சுகமே மயில் குயிலே
இணைபிரி யாஅன் றிலே
எனைப்பிரிந் தாரை நாடி (நினைத்தால்)

10. பாம்பின்வாய்த் தேரை போலப்
பலபல துய ருற்றுத்
தேம்பினேன் றன்னை யாளச்
சீக்கிரம் வரு வாரை (நினைத்தால்)

11. ஆரேனும் பத்தி யணு
அளவுசெய் தாலு மவர்
சீரேறு செல்வ முறச்
செய்தாரைப் பிரிந் தத்தை (நினைத்தால்)

12. ஆயிவி யநா ளாரை
ஆவடு துறை யாரை
நாயேனைப் பிரி சிவ
ஞானபூ ரண ரைநான் (நினைத்தால்)

## பழம்பாட்டு *

சிற்றுரையும் பேருரையும் சிவஞான
போதமெனுந் தெய்வ நூற்குக்
கற்றுணர்ந்தோர் களிகூரக் கருணையினுல்
செய்தளித்தான் கலைகள் தேர்ந்து
முற்றுணர்வு முதலியவற் ருற்சிவனே
என்றறிஞர் மொழிந்து போற்ற
நற்றுறைசைப் பதிமருவுஞ் சிவஞான
யோகியெனும் நாமத் தோனே. (1)

பொய்ஞ்ஞானப் படிறர்புகல் புரையுரைகள்
புரைபட்டுப் புறம்போய் வீய
உய்ஞ்ஞான சித்தாந்த சைவமொழி
பொருளுண்மை உலகம் தேற
மெய்ஞ்ஞான வளந்தருமெய்ச் சிவஞான
பாடியம்தென் மொழியின் மேலாச்
செய்ஞ்ஞானத் துறைசைவரு சிவஞான
முனிவர்பிரான் திருத்தாள் போற்றி. (2)

* இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. துறைசை ஆதீனத்து 16-வது மகா சந்நிதானமாய் விளங்கிய மேலகரம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் காலத்தில் சின்னப் பட்டத்தில் எழுந்தருளியிருந்த தளிக்கை - நமச்சிவாய தேசிகர் இதனைச் செய்தார் என்று கூறுவதுமுண்டு.

## சிவஞானயோகிகள் சரித்திரம்
### (ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றியது

சீலமிகும் மூலஆ கமப்பொருளொன் றென்றுமித் திறம்பு றுது
ஞாலமிகும் குலதெய்வம் எனப்பலருங் கொண்டாட நாங்கள்
[உய்யச்
சாலமிகும் சமவாத முதலியபோய் ஒளித்திடஉ தயமாய் வந்த
பாலமிகும் விழிமறைத்த சிவஞான யோகிபதம்பணிந்து
[வாழ்வாம்.

## தனிச்செய்யுள்
### (காசிவாசி ஸ்ரீமத் குமாரசாமிச்சுவாமிகள் இயற்றியது)

பேனமார்ந் தொழுகும் பெண்ணைசூழ் வெண்ணைப்
பெருநகர் வாழுமெய் கண்ட
ஞானமார் குரவன் நவின்றிடு நூற்கு
நன்மைசேர் பாடிய மியற்றி
ஊனமார் பிறவிக் கடலுழல் வோர்கட்(கு)
உறுபுணை யாகவே அளித்த
ஞானயோ கிகள்தம் திருவடிக் கமலம்
நாம்சிரத் தணிந்துவாழ்த் தெடுப்பாம்.

## சிதம்பர சபாநாதபுராணம்
### (ஸ்ரீ சபாபதிநாவலர் இயற்றியது)

குறியமுனி அருளியமெய் வரத்திறைல்
அவதரித்துக் கோதில் ஞானத்
துறைசைநமச் சிவாயகுரு அருட்கடலும்
வடமொழிதென் மொழிப்போர்த் தூய
நிறைகடலும் உண்டுபுனி தாத்துவித
சித்தாந்தம் நிலவப் பூமேல்
மறைமொழிமெய்ச் சிவஞான பாடியஞ்செந்
தமிழ்வகுத்த யோகி வாழி,

# ஸ்ரீமத் சிவஞானசுவாமிகள் இரட்டைமணிமாலை

**(பொ. பாண்டித்துரைத்தேவர் இயற்றியது)**

### காப்பு

**கலித்துறை**

அணிமாலை வேணிகொள் ஈசனுக் காட்பட் டரும்பிறவிப்
பிணிமாலை தீர்துறை சைச்சிவ ஞானப் பிராற்கிரட்டை
மணிமாலை சூட்ட எளியேன் மதிக்கு மகிழ்தருமால்
தணிமாலை யச்செல்வி நல்கோடை யாம்பலந் தண்மலரே.

### நூல்

**வெண்பா**

பொன்னுலகும் பாரும் பொருந்துறினும் போகினுமற்(று)
என்னுறினும் புன்சமயம் எய்துவரோ — நன்னெறியோர்
தேடுசிவ ஞானமுனி செப்புபுனி தாத்துவிதம்
நாடியுணர் மேலோர் நயந்து. (1)

**கலித்துறை**

நயனறி யாதபுன் செல்வர்தம் வாயிலில் நாடொறும்போய்ப்
பயனறி யாதரும் பாஇசைப் பீர்வட பாற்புலிசை
இயனிறை வேதியற் கன்றிரும் பொற்கிழி யேற்றுமணஞ்
செயநெறி யாலுத வும்பெரி யோன்புகழ் தேருமினே. (2)

**வெண்பா**

தேரினறி விற்சிறந்தார் செப்புசிவ ஞானமுனி
சோர்வில் இளமைத் துறவறிந்தும் — பாருலகில்
கொன்று தரித்துழலுங் கோதுடையேன் நெஞ்சினைவிட்(டு)
எந்நாள் அகலும் இருள். (3)

**கலித்துறை**

இருட்டலை நேர்கரு மென்குழல் மாதர் இணைவிழியால்
மருட்டலை நீத்தெளி யேனுய்யு மாறு வகுத்தபிரான்
தெருட்டலை சேருஞ் சிவஞான பாடியம் தேர்ந்தவர்க்கே
சுருட்டலை வாய்ப்புன் துரும்பொத்த சிந்தைத் துரிசறுமே. (4)

### வெண்பா

மேயகலை நாதாங்கும் வெண்பூதி மெய்தாங்கும்
பாயகரம் ஈசன் பணிதாங்கும் – தோய்கருணை
வெள்ளமிரு கண்தாங்க மேவுசிவ ஞானமுனிக்(கு)
உள்ளம் பொறைதாங் குறும். (5)

### கலித்துறை

குறுமா முனிவன் தருவரத் தாலிக் குவலயஞ்சீர்
பெறுவா னுதித்த சிவஞான தேவரின் பேரருளிச்
சிறுநாயி னேன்பவ வாரியிற் பாயின் திறம்திடும்கோ(து)
அறுவா னதியும் உவராழி பாய்ந்திசைத் தாயதுவே. (6)

### வெண்பா

ஆயசம யம்பலவும் ஆரியமா பாடியமே
மேயவென நற்சைவ மேன்மையுறத் – தூயதமிழ்ப்
பாடியமும் பாரிற் பகர்ந்தான் பரனடியே
நாடுசிவ ஞானமுனி நன்கு. (7)

### கலித்துறை

நற்பாலர் வேண்டின் மயிலம்மை யார்தவம் நாடுகநூல்
கற்பான் நசையிற் சிவஞான தேவன் கலையுணர்க
சொற்பா லறத்துற வுன்னிலன் னுனின் துறக்கஇப்பா
ரிற்போகம் வேட்கின் சிவயோக மேவிரைந் தெய்துகவே. (8)

### வெண்பா

எய்துமுயி ராங்கரியை ஈர்த்தாசை வன்கரவம்
வெய்யபவ வாரிதியுள் வீழ்த்தாமே – பொய்தீர்
தெருளாய் சிவஞான தேசிகா நின்பேர்
அருளாழி உய்த்தெனைவந் தாள். (9)

### கலித்துறை

ஆளாய் மறைசையுள் வாகீசர் மேவ அரன்தளிசேர்
தாளார் கதவம் திறந்ததென் பார்துறை சைப்பதிவாய்
வேளா மெனச்சொல் சிவஞான தேசிகன் மேவியபின்
மாளாத மாயக் கதவற்ற தால்என் மனத்தளிக்கே. (10)

**வெண்பா**

கேளாரும் வேட்குமொழி கேடில்சிவ ஞான அருள்
ஆளாகின் வாயதெனில் ஆர்விழையார் — சூளுரைவேட்(டு)
அண்ணு மலையண்ணல் அண்ணல்வியப் பேபருக
எண்ணுரார் வானமுதொன் றின். (11)

**கலித்துறை**

ஒன்றூர்த் தெறல்செய் துவந்தார்க் கருள்தவம் உன்கண்ணதே
என்று மொழிவர் சிவஞான தேவ இசைந்தசைவ
மன்னா வலன்செய் இலக்கணஞ் சூரு வளியுறுத்தி
உன்னுப் பவணந்தி நூலினி தாக்கலென் ஓர்கிலனே. (12)

**வெண்பா**

ஓராழி உண்டமுனி உட்கவட சொற்கடலும்
சீரார் தமிழ்க்கடலும் சேரவுண்டு — பாருலகில்
தீங்கவியா மாவுறையால் செய்யசிவ ஞானமுகில்
ஈங்கவியா நீக்கும் இடர். (13)

**கலித்துறை**

இடரார் பிணியெனப் பன்மதப் பேய்கள்வந் தென் அறிவை
தொடரா மயக்கினும் யான்மரு ளேன்பணை சூழ்துறைசைத்
திடஞர் மனத்துச் சிவஞான தேசிகன் தேர்ந்துலகில்
அடலார் தரப்புகல் சித்தாந்த நூலென் அகத்ததுவே. (14)

**வெண்பா**

அகமடங்கும் ஆசை அகற்றறியார் தம்பால்
சகமடங்க எண்ணிச் சலிப்பர் — மிகமடங்கொள்
பொய்யறிவி ஞர்பாற் புகுதா தெனையாண்டான்
மையில்சிவ ஞானமுனி வன். (15)

**கலித்துறை**

வன்னின்ற கொங்கை யுமையொரு பாகனை வாழ்த்துகைக்கே
சொன்னின்ற நாவணங் கச்சிரம் ஆலயஞ் சூழ்வரத்தாள்
பொன்னின்ற மெய்யெழில் காணுகைக் கேகண் பொருந்து
முன்னின் றுணர்த்துங் குருசிவ ஞான முனிக்கரசே. [மென

**வெண்பா**

அரவிடமா வாழ்சடையார் ஆய்ந்தளித்த நூற்குத்
திரவிடமா பாடியமுன் செய்தோன் – பரவுலகில்
குற்றங் களைபுநன்கு கூறியநூல் கொண்டுய்யா
மற்றங் களையுலக்கு வார். (17)

**கலித்துறை**

வாரிக் குமாரனைக் காய்சிவ ஞான வரோதயன்பூ
வாரிக் குமார இறும்பூ துறுத்துநின் வாய்மொழிதேர்
வாரிக் குமாரதங் கோடல்செய் யார்மன் மதிப்பர்கொலோ
வாரிக் குமார விலங்கற்கு நந்தல்செய் வானையுமே. (18)

**வெண்பா**

மைமொழியும் ஈச்னுயிர் நாடியவற் கூடுமிடை
மைவருவெம் பாச மறைப்பதெனு – உய்வழியும்
தேற்றுஞ் சிவஞான தேவளளி யேன்நினக்காள்
ஆற்றுமுறை யென்கொலறை யாய். (19)

**கலித்துறை**

அறைகின்ற சீரிளம் பூரணர் சேனு வரையர்நச்சர்
நறைகொண்ட தார்ப்பரி மேலார்முன் னுயவர் நன்மதிக்குங்
குறைகண் டிகழுஞ் சிவஞான தேவனென் கோதுறுபாப்
பொறைகொண்ட சிந்தை உவந்தேற்கு மாலருள் பொற்புறவே.

## தனிப் பாக்கள்

திருக்கும் பவத்தை அகற்றுமருள்
செல்வா வருக நால்வேத
சிரமெய்ப் பொருளை உணர்ந்தமுதல்
தேவா வருக எம்உயிரைக்
கருக்கும் வினையை நீக்குகளை
கண்ணே வருக சுவைநிறைந்த
கனியே வருக கருணைரசக்
கரும்பே வருக கருத்தழிந்து

தருக்கும் சமய கோடியெலாந்
தகர்த்துச் சைவம் இனிதோங்கத்
தமிழின் மாபா டியம்வகுத்த
தலைவா வருக சயிலாதி
வருக்கத் துயர்ந்து விளங்குசிந்தா
மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான
வள்ளால் வருக வருகவே. (1)

நதியைக் கரந்த சடைப்பெருமான்
நயனத் தீயால் பொடியானேன்
நாள வனசக் கணையுமெய்தா
நலஞர் ஞானத் திருவுருவாய்ப்
பொதியக் குறுமா முனிவரத்தால்
புவியில் பிறந்து புகழ்நிறைந்து
பொய்யைத் தணந்து மெய்யுணர்ந்து
புனிதாத் துவித நெறிப்படியே
பதியைப் பசுவைப் பாசத்தைப்
பரமமோன நிலையினைஇப்
படியென் றறியப் பணித்தருளால்
பவசா கரத்தில் உழலாதெம்
மதியைத் திருத்திக் கதியளிக்கும்
வாழ்வே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான
வள்ளால் வருக வருகவே. (2)

கலைதேர் நமச்சி வாயகுரு
கருணைக் கடலில் திளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக்
காமத் தறியை அறவீழ்த்தி
அலையுஞ் சமயத் தருக்களைக்கீழ்
அடிவே ரோடும் அகழ்ந்தெறிந்திட்(டு)
அருளின் படாத்தை முகமேற்கொண்(டு)
ஆதி வேதா கமங்களெனும்
தொலையா மணிகள் இருமருங்கும்
தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்க மோடும் உலகமுற்றும்
சுற்றும் வெற்றி வாரணமே

மலையா தருளு முனிவர்சிகா
மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான
வள்ளால் வருக வருகவே. (3)

## சிவஞானசுவாமிகள் மாலை

### (புழலை – திருநாவுக்கரசு முதலியார் இயற்றியது)

#### காப்பு

சீர்வளருஞ் செல்வச் சிவஞான தேசிகன்மேல்
நார்வளர்பா மாலையொன்று நன்கியற்ற – ஏர்வளர்நம்
கற்பகத்தி லேநடிக்குங் கந்தனுக்கு முன்வந்த
கற்பகமுக் கட்களிறே காப்பு.

#### உபாசனமூர்த்தி வணக்கம்

மங்களமார் திருத்தணிகை வள்ளிதெய்வ யானையுடன்
எங்கள்குல தெய்வமெனும் எந்தைகும ரேசன்மா
தங்கமுகத் தோற்கிளையோன் தாளிணையை அகத்திருத்திச்
சங்கையறக் கற்றுணர்ந்து தான்பாடத் துதிபுரிவாம்.

#### குருவணக்கம்

பரவபர ஞானமுறு பலகலைகள் உதவித்தீ
விரபக் குவமளித்த விற்பனனுஞ் சித்தாந்த
சரபமெனும் அட்டாவ தானியாய் வளர்பூவைச்
சுரதருநங் கலியாண சுந்தரனற் கழல்துதிப்பாம்.

#### நூல்

ஆனந்தக் கூத்தருட னம்மைமயி லம்மைசெயுந்
தானந் தவத்துருவாத் தன்னிகரி லாதுதித்து
ஞானந் தழைத்தோங்க நாடுமடி யார்க்கருளுந்
தீனபந்து வாந்துறைசைச் சிவஞான தேசிகனே, (1)

ஆலவமு துண்டமரர் அஞ்சலொழித் தாண்டவொரு
நீலமிடற் றோன் சமயம் நிலைத்திடுவான் வேண்டியது
கூலமிலாப் புறச்சமயக் கொள்கையொழித் திடவந்த
சீலமுறுந் தென் துறைசைச் சிவஞான தேசிகனே. (2)

தக்கநர சிங்கமதைச் சரபமாய் நின்றொழித்த
நக்கனருள் வைபவத்தின் நலம்பகர வந்தவுயர்
விக்கிரம சிங்கபுர வேளாள குலமணியாத்
திக்கனைத்தும் புகழ்துறைசைச் சிவஞான தேசிகனே. (3)

பொய்கண்டார் மயக்கொழிக்கும் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட சாத்திர நூல் மேம்படச்செய் தடியவருக்(கு)
உய்யசிவ போகமதை ஊட்டிமகிழ் வித்துநலஞ்
செய்யஅருள் தென் துறைசைச் சிவஞான தேசிகனே. (4)

நச்சரவம் பூண்டாற்கு நல்லடிமை யாகிமிடி
மிச்சையொழித் திடுதுறைசை விபுதர்சிலர் தமைநோக்கி
இச்சைமிகுத் தையாண்டில் இறைஞ்சிவழித் தொண்டுபுரி
செச்சைமணங் கமழ்துறைசைச் சிவஞான தேசிகனே. (5)

மத்துவர்சங் கரரிரா மானுஜர்பா டியமறுக்கப்
புத்திதருஞ் சிவஞான போதவுண்மை தெரிந்துசிவ
பத்தர்மகிழ் திராவிடமா பாடியத்தைப் பரிந்தளித்த
சித்தர்மிகுந் தென் துறைசைச் சிவஞான தேசிகனே. (6)

பன் னூலின் நயமறிந்து பாடும்பா வலர்க்குரிய
நன் னூலின் விருத்தியுரை நாடெங் கணும்பரவச்
சொன்னேய முடன்திருத்தித் தூய்மைபெற வேசெய்த
தென் னடோங் கியதுறைசைச் சிவஞான தேசிகனே. (7)

விரைகமழ்நற் குழலுமையாள் விமலனடி யார்பலரும்
நிரைபிறழா தேயுண்ணும் நேர்ச்சியுறச் சமவாத
உரைமறுப்பொன் றருமையதாய் உலகினுக்கிங் குபகரித்த
திரையுலகில் உயர்துறைசைச் சிவஞான தேசிகனே. (8)

புகழுஞ்சே னவரையர் புகலுமிளம் பூரணர்சீர்
நிகழுநச்சி னார்க்கினியார் நேர்ந்தபரி மேலழகர்
மகிழுமுரை களிற்சங்கை மாற்றிடச்சூத் திரவிருத்தி
திகழுறச்செய் தென் துறைசைச் சிவஞான தேசிகனே. (9)

ஆரியநூ லிற்கண்ட அன்னம்பட் டீயமுடன்
சாரிதமாய் வளர்தருக்க சங்கிரக மொழிபெயர்த்துப்
பாரிலுப காரமதாப் பரிந்தளித்த பலகலைதேர்
சீரியனுந் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (10)

அருவுருவங் கடந்துநிறை யாதிவகுத் தருளியபூ
மருவுபெரு வடமொழிதென் மொழிக்கடலைக் கரைகண்ட
பெருமைமிகுத் திடுபுகழைப் பெற்றதொரு பெற்றியினுல்
திருவுடைய தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (11)

சொன்னயமும் பொருள்நயமுந் தோன்றஉயர் நூல்களுரை
பன்னிருமா ணவருடனே பாவலரும் ஏத்தவரும்
அன்னபுகழ்த் தன்மையெலாம் அடைந்தனை தருமையுயர்
தென்தமிழோங் குறுந்துறைசைச் சிவஞான தேசிகனே. (12)

முரதமுறு வான்சமய முரண்பாட்டை ஒழிக்கவந்த
அரதத்த சிவாசாரி யார்சுலோ கந்தனைச்
சரதமிதெ னத்தமிழால் மொழிபெயர்த்துத் தந்ததொரு
திரமென்னே தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (13)

பவமதத்தர் உளநடுங்கிப் பணியவுயிர் வழிகாட்டுஞ்
சிவதத்வ விவேகமெனத் திகழ்மூல சுலோகங்கள்
நவநயமாய் மொழிபெயர்த்து நற்றமிழால் நல்கியதோர்
சிவமணமே கமழ்துறைசைச் சிவஞான தேசிகனே. (14)

சிந்தனைசெய் துய்யவருள் திருவிளையாட் டருமைமிகு
கந்தபுரா ணஞ்சொற்ற கச்சியப்ப சிவாசார்ய
எந்தையவ தாரஞ்செய் எழிற்காஞ்சி மான்மியத்தைச்
செந்தமிழில் தருதுறைசைச் சிவஞான தேசிகனே. (15)

கன்னல்சருக் கரைபாகு கற்கண்டு முப்பழமோ(டு)
அன்னமுடன் பால்தெளிதேன் அவைகளிலும் மிகுசுவைசேர்
சொல்நயமும் பொருள்நயமும் துலங்கியொளிர் பாடல்களைத்
தென்தமிழால் தருந்துறைசைச் சிவஞான தேசிகனே. (16)

சருவாத்ம சம்புசிவா சாரியர்செய் கத்தியத்தைப்
பெருமானற் சித்தாந்தப் பிரகாசி கைப்பெயரால்
நிருமித்த மொழிபெயர்ப்பு நிலவுலகில் பரவச்செய்
திருமருவு தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (17)

ஞாலமதி லேயுயர்ந்த ஞானதே சிகனும்பின்
வேலப்ப தேசிகன்பால் வேதாக மங்கற்றுச்
சாலவுயர் தீட்சாதி சர்வமும்பெற் றேயுயர்ந்த
சீலமுறுந் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (18)

மதுரமொழித் திருக்குறளுந் தரார்த்தமுடன் மன்னுபுகழ்
விதுவெனநற் குளத்தூர்வாழ் விமலன்சோ மேசற்கு
முதுமொழிவெண் பாச்சொற்ற முக்களா லிங்கரெனுந்
திதிகுறையாத் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (19)

மலையமுனி மகிழ்ந்தளித்த வரமதனுல் வந்துதித்து
மலைமகளோ டுறுபரமன் மன்னுகுளத் தூரிலைசை
கலைசைநகர்ப் பதிற்றுப்பத் தந்தாதி களைத்தந்த
சிலைசிகர்கல் வித்துறைசைச் சிவஞான தேசிகனே. (20)

செங்கழுநீர் விநாயகற்கும் சிறந்தவமு தாம்பிகைக்குஞ்
சங்கமதில் தவழ்பிள்ளைத் தமிழ்நூல்கள் தந்தருளி
எங்களைவாழ் விக்கவந்த எழிற்சைவ சமயமெனுந்
திங்களொளிர் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (21)

குமரிசொர்ணம் பிகையம்மை குலவுபுகழ்க் குறும்பருடன்
சமரியற்றித் தொண்டைமான் தாரேடுஞ் சமயத்தில்
கமரிலெழு பரன்முல்லைக் கம்பரந்தா திகள்தம்மால்
திமிரமறச் செய்துறைசைச் சிவஞான தேசிகனே. (22)

செப்பறைநற் பதிவளருஞ் சீரகிலாண் டேசுவரிக்(கு)
ஒப்பவொரு பதிகந்தந் தொளிரானந் தக்களிப்பை
இப்புவியிற் பெரியதிரு வேகம்பர் தாளிணைக்குச்
செப்பிமகிழ் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (23)

பூவைமொழிப் பூண்முலையார் போகமதில் ஆழ்ந்தாலும்
சேவைசெயல் கடனென்னுந் திருத்தொண்டர் திருநாமக்
கோவைதொகுத் தருளியநற் குணக்குன்றே சமயமெலாந்
தேவையுறுந் தென்துறைசைச் சிவஞான தேசிகனே. (24)

ஆதிபர மாசாரி யார்நமச்சி வாயரெனுந்
தீதிலா மூர்த்திகள்மேற் சீர்பஞ்சாக் கரமாலை
ஓதியெம்ம னோருய்ய உபகார மாச்செய்த
சேதிமம்பல் வளர்துறைசைச் சிவஞான தேசிகனே. (25)

தடுத்துரைத்தோர் வாயடங்கத் தனிவயிரக் குப்பாயம்
எடுத்தென்னுஞ் சொற்கியற்றி ஏத்துசிவ பக்திவலைப்
படுத்தியுயர் ஞானமமர் பாவலர்முன் புறமதங்கள்
திடுக்கிடச் செய்தென் துறைசைச் சிவஞான தேசிகனே. (26)

கம்பரா மாயணத்துக் கவிக்குப்பற் பலசங்கை
வம்புவை ணவரடங்க வரைந்திடவே அவர்வேண்டச்
சம்பந்தங் காட்டிஉத்த ரந்தந்த குணக்கடலாம்
செம்பியநா டுறுந்துறைசைச் சிவஞான தேசிகனே. (27)

சீனிகற்கண் டோஎனுநற் சிவஞான சித்திக்கு
ஞானப்ர காசருரை நலமிலாப் போலியுரை
ஆனதென மறுத்திட்ட அந்தமிகுஞ் செய்யதமிழ்த்
தேனளிசிந் திடுந்துறைசைச் சிவஞான தேசிகனே. (28)

நிலவுலகில் எம்மனோர் நிலைநின்று வாதிக்கப்
பலவுரைகள் கண்டனங்கள் பலநூல்க ளோத்தந்து
புலமைமிக மென்மேலும் புகழ்பெறுநற் சிவசமயத்
திலகமென ஒளிர்துறைசைச் சிவஞான தேசிகனே. (29)

அறிவேநல் லானந்த அருட்குருவே அடியார்கள்
உறவேஎன் ஆருயிரே உறுதுணையே புறச்சமயர்
பிறிவேபுண் ணியவடிவே பேரமுதே ஞானியர்கள்
செறிவேதாங் கியதுறைசைச் சிவஞான தேசிகனே. (30)

## வாழ்த்து

வாழிசங் கரமூர்த்தி வாழிசாம் பவியம்மை
வாழியைங் கரநாதன் வாழிசண் முகக்கடவுள்
வாழிதெய்வ யானைவள்ளி வாழியுயர் சிவசமயம்
வாழிதிரு நீறுமணி வாழியடி யார்சரணே. (31)

# ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் பதிகம்

## (ஸ்ரீமத் தக்ஷிணாமூர்த்தித் தம்பிரான் இயற்றியது)

### காப்பு

பொன்னு ரிதழி முடியோன் உமையிரு புத்திரர்தம்
மின்னார் திருவடி போற்றுவன் வெண்ணெயில் மெய்கண்டதே
முன்னு மியகுரு பஞ்சாக் கரனருள் முற்றவந்த
மன்னும் எனது சிவஞான யோகியை வாழ்த்துதற்கே.

### நூல்

உலகுடை நாயகி முக்கள வீசன் உயர்பொதியம்
நிலவும் முனிவன் அருளவ தாரம்இந் நீள்நிலத்தில்
கலக இருட்சம யங்களை நீக்குங் கதிரவனென்(று)
இலகுந் துறைசைச் சிவஞான யோகியை ஏத்துதுமே. (1)

பூவார் பொதியநற் சாரல்வண் சிங்கையில் புண்ணியஞ்சேர்
நாவார் புகழ்பெறும் ஆனந்தக் கூத்தர்தம் நன்மனையாம்
தேவார் மயிலம்மை யார்செய் தவத்தில் திகழ்தரும்எம்
கோவாந் துறைசைச் சிவஞான யோகி குலதெய்வமே. (2)

வேதநற் சூத்திரம் ஆகம பாடியம் மெய்ப்பொருளென்(று)
ஓத அருட்சைவ சித்தாந்த பாடியம் ஓதுபவர்க்(கு)
ஏது உதாரணம் மேற்கோ ளுடனங் கெடுத்துரைக்கும்
போதன் துறைசைச் சிவஞான யோகியைப் போற்றுதுமே.(3)

சிவஞான யோகி திருவடிக் கன்பினைச் செய்தவரே
அவஞானந் தீர்ந்தத் துவிதமெய்ஞ் ஞான அருள்நிறைவோ(டு)
உவமான மற்றுறு முத்தியும் உண்மை உலவஅருள்
தவஞான சித்தியும் பெற்றுல கேத்துந் தனித்தவரே. (4)

பாச மெனுஞ்சுரம் பட்டுழல் கின்ற பலவுயிர்க்காத்
தேசுடைப் பஞ்சாக் கரத்தெண் டிரையுண்டு தேசமெலாம்
ஈச னருள்பொழி மெய்ஞ்ஞான மேக மென இயங்கிக்
காசினி போற்றுஞ் சிவஞான யோகிநங் கற்பகமே. (5)

ஆரியந் தீந்தமி ழாய்ந்தவற் றின்பம் அகனிலத்தோர்
நேரிய சைவசித் தாந்த முறையறி நீர்மையினில்
ஓரிய ஞான அருணூற் குரைசெய் துறுதியருள்
சீரிய னாகுஞ் சிவஞான யோகியைச் சேர்குவமே. (6)

பன்னிரு சூரியர் கண்ணிருள் நீக்கும் படியெனவே
பன்னிரு சூத்திர மாய்நின் றகவிருள் பாற்றுமெய்நூற்(கு)
இன்னுரை பாடியந் தந்தொரு வீட்டின்பம் எய்தவைத்தெம்
இன்னலை நீக்கு சிவஞான வள்ளலை ஏத்துதுமே. (7)

இருட்கே வலத்தின் இருந்த நிலையும் இருவினைசேர்
மருட்கே வலத்தில் தனுகர ணாதி வழக்கியலும்
அருட்கே வலத்தில் மலமாதி போக்கி யருள்நிலையும்
தெருட்பா லுணர்த்துஞ் சிவஞான தேவினைச் சிந்திக்கவே. (8)

மெய்கண்ட நுண்மைச் சிவஞான போதமிம் மேதினியில்
கைகண்ட உண்மைக் கதிநல்கும் என்று கசிவினொடு
மெய்கண்ட சாத்திரம் ஈரேழி னூறு விளக்கியருள்
கைகண்ட வான்மைச் சிவஞான வாழ்வைக் கருதுவமே. (9)

பதிபசு பாச இயல்பை உலகினர் பாத்துணர
விதிமுறை யாக விளங்க இயற்றி வித்தகமெய்
அதிபதி யாகுஞ் சிவஞான யோகி அருட்குரவர்
மதியருள் பூதி எழுத்தஞ்சு கண்டிகை வாழியவே. (10)

## திருவங்கமாலை

(ஸ்ரீ காருடை. சூரியமூர்த்திப்பிள்ளை இயற்றியது)

### வெண்டுறை

தலையே நீ வணங்காய் — தமிழ்
சைவம்எண் நூல் வழியே
நலம்ஆக் கியசிவ ஞானி திருவடி
தலையே நீ வணங்காய். (1)

கண்காள் காண் மின்களோ — கண்டி
    பூதிகல் லாடை யருள்
பண்பா டுஞ்சைவ பாக்கிய வாழ்வினைக்
    கண்காள் காண்மின்களோ. (2)

செவிகாள் கேண் மின்களோ — சிவ
    ஞானிமுந் நால்வர் தம்மைக்
கவியாய் ஞானியாய்க் காட்டி யருள்சீர்த்தி
    செவிகாள் கேண்மின்களோ. (3)

மூக்கே நீ முரலாய் — முனி
    முத்தி விருப்பி னர்நல்
நோக்காய்ப் பாடியம் நுவன்ற அருள்மணம்
    மூக்கே நீ முரலாய். (4)

வாயே வாழ்த்து கண்டாய் — மயில்
    அம்மை ஆனந்த ருக்குச்
சேயாய் வந்த சிவஞான தேவனை
    வாயே வாழ்த்து கண்டாய். (5)

நெஞ்சே நீ நினையாய் — நினை
    வார்வினை நீற வைப்பான்
பஞ்சே நாளும் பதன்சிவ ஞானியை
    நெஞ்சே நீ நினையாய். (6)

கைகாள் கூப்பித் தொழீர் — கடி
    மாமலர் தூவி நின்று
செய்கால் மொய்ச்சிங்கைத் தேவை முழுவன்பிற்
    கைகாள் கூப்பித் தொழீர். (7)

ஆக்கை யால் பயனென் — அன்பின்
    அத்து விதம யக்கம்
போக்கும் சிவஞானப் புனிதன் பணிசாரா
    ஆக்கை யால் பயனென், (8)

கால்க ளால் பயனென் — கங்கை
    யார்குலம் மேன்மை பெற
நூல்கள்சொன் னன்கோயில் நோற்றுச் சுற்றிவராக்
    கால்க ளால் பயனென். (9)

உற்றார் வேண்டும் கொலோ — உண்மை
யூரும் உறவு மாகப்
பெற்றோம் சிங்கைப் பிரானடி யாரைமற்
றுற்றார் வேண்டுங் கொலோ. (10)

இறும்பூ தெய்தப் பெற்றேன் — எங்கள்
ஏந்தலைச் சிங்கை யனைப்
பெறுஞ்சீ ரன்பர்பாற் பேசும் பெருமையால்
இறும்பூ தெய்தப் பெற்றேன். (11)

தேடிக் கண்டு கொண்டேன் — திருச்
சிங்கைச் சிவ ஞானி
வீடு சேர்த்திடு மெல்லடி என்னுளே
தேடிக் கண்டு கொண்டேன். (2)

## ஸ்ரீ சிவஞானசுவாமிகள் சந்தப் பஞ்சரத்தினம்

**(வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளை இயற்றியது)**

நிகம மாகிய சந்தவி தங்களும்
நிகழ்சி வாகம முஞ்சொலு மந்தநன்
நெறியில் நாளுந டந்துப வந்தெற அறியாமல்

நினைவி லேயெழும் வஞ்சமு டன்பல
கொடிய பாவம கிழ்ந்துபு ரிந்தொரு
நிலைநி லாதுசு ழன்றுவ ருந்துமென் வினைதீரப்

புகழ்நி லாவிய கஞ்சம லர்ந்திணை
பொருவு மாறுவி ளங்கியி ளந்தளிர்
பொலியு மேனியி கழ்ந்துந லந்திகழ் விபுதேசர்

புனையு மாமுடி தங்கியி லங்குநின்
அருண பாதம் அணைந்துசி வம்பெறு
புனித வாழ்வுது ளைந்துசி றந்திட அருள்தாராய்

அகில காரண சங்கரர் பொங்கர
வணியு நாயகர் மங்கையொர் பங்கினில்
அமரு நாதரி யம்பிய தந்திர முதனூலை

அடியர் வாழமெய் கண்டவன் அன்றருள்
பொருளெ லாருமறிந்துதெ ளிந்திட
அமல பாடியம் இங்கண்வ ழங்கிய அருளாளா

முகலி வாசினி யென்றும கிழ்ந்துறை
துறைசை மேவிய தொண்டர்கள் தங்களின்
முதல்வனே தினமென்பணி கண்டருள் சிவஞான

முனிவ ராதிப சங்கம்வ ரன்றிய
பொருளை மாநதி பைந்தர ளஞ்சொரி
மூதிய மாநகர் சிங்கையில் வந்தருள் பெருமாளே. (1)

ஒருநாலு சந்த
மறைபேச நின்ற
ஒளிநீற ணிந்த நுதலோடென்

உளமேபு குந்த
கனிவாயும் ஐந்தும்
உணர்வோர்கள் தங்கள் முடிசூடும்

இருதாளும் நெஞ்சின்
மறவாமல் உன்றன்
இயனூலு ணர்ந்து பலபாவின்

எழிலேமி குந்த
புகழ்பாடும் இன்பம்
இனியேனும் என்கண் அருள்வாயே

திருமாலு மென்றும்
அறியாது யர்ந்த
சிவஞான தந்த்ர உரையாளா

செகநாடு தொண்டர்
அவரா திரண்டு
திறலோர்ப ணிந்த குருநாதா

வரமேசி றந்த
மயிலார் சுரந்து
மகிழ்பால ருந்தி வளர்தேவா

வளமேவு சிங்கை
நகர்வாழும் அன்பர்
வழிபாடு கந்த பெருமாளே. (2)

அம்புவி யனந்த மைந்தர்
தம்பொரு ளிலங்கல் பெண்கள்
அன்புசெ றிநண்ப ரென்று மனமேவி
அங்கொரு பொயிங்கோர் வஞ்சம்
மிஞ்சுமய லல்கொண்டி யம்பி
அஞ்சுபொறி யுங்க லங்கி உழல்வார்கள்
செம்பொரு ளுணர்ந்து மன்ற
நன்கலை பயின்று கொண்ட
சிங்கியெனு நஞ்ச ளைந்த மனைவாழ்வு
சிந்தியுண் மகிழ்ந்த தொண்டர்
தங்குழு வணைந்து னம்பு
செஞ்சர ணகஞ்ச மென்று புனைவாரே
கும்பமுனி தந்த செஞ்சொல்
உம்பர்மொழி யம்ப ருந்து
கொண்டலென இங்கெ ழுந்த புகழாளா
குன்றென உயர்ந்த சஞ்சி
தங்கெட விளங்கு கண்கள்
குந்தமென விங்கண் விண்ட குருநாதா
இம்பரின்மெய் கண்ட வன்செய்
தந்த்ரவுரை யெங்கும் விஞ்ச
இன்றமி ழணங்கி லங்க அருள்வோனே
இஞ்சியை வளைந்து நின்று
தண்பொருநை யுந்து சிங்கை
என்றநகர் வந்த யெங்கள் பெருமாளே. (3)

புவிமீது சாத லஞ்சு
கவிராயர் தேடி வந்து
புகழ்பாடி வாட நெஞ்சம் உருகாமே
பொருளேமை காரி லஞ்சி
வயலேழு மேடை யென்று
பொதிசோறும் ஈத லின்றி மயலாகி
அவமேயெ நாளும் வஞ்சம்
உலவாது பேசி யிங்கண்
அபவாத மோக மிஞ்சி அணைவார்கள்

அருளேக மாது தஞ்சம்
எனவேயுள் மேவி யுன்றன்
அழகான தாள டைந்து மகிழ்வாரே
நவமேவு பேத மொன்று
முதலேதி யானி நின்ற
நலமேவி ீடு கென்ற அருளாளா

நசையேயி லாது பஞ்ச
மலமேகி லாவு மிண்ட
நடர்தாழும் வாகை கண்டு நிலமீதே
சிவமேவு மாறு கொண்ட
அருளாலு லோக நம்பு
சிவஞான பாடி யஞ்செய் குருநாதா

திருநாதன் வேத னிந்த்ரன்
முதலோர்கண் மேவு சிங்கை
செகம்வாழ வேயெ ழுந்த பெருமாளே. (4)

துளவமால் பேணு மும்பன் அருளாலே
துறைசைமே ஞனெ ழுந்த முதல்வோனே
உளமதே கோயில் கொண்ட புகழாளா
உருகியே தாழு மன்பர் பெருவாழ்வே
தளர்விலா தோர்ப ணிந்த குருநாதா
தமிழின்மா பாடி யஞ்செய் திருவாளா
வளமெலா மேவு சிங்கை வருதேவா
மலநிலா தோவு மெங்கள் பெருமாளே. (5)

## ஸ்ரீ சிவஞானசுவாமிகள் ஆனந்தக்களிப்பு

**(வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளை இயற்றியது)**

ஆனந்தம் ஆனந்தம் தோழி – சிங்கை
ஆளும் சிவஞான அண்ணலைப் பாட
ஆனந்தம் ஆனந்தம் தோழி.

தென்னவன் விக்கிரம சிங்க – புரம்
சேரும்வே ளாளர் குலக்கொழுந் தாகி
மன்னிய ஆனந்தக் கூத்தர் – மகிழ்
மயிலம்மை யார்தவ வாழ்வென வந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (1)

திக்கெல்லாம் போற்றும் உலகாள் — உடன்
தேர்ந்த பிரானருள் என்ன அணைந்தார்
முக்களா லிங்க ரெனப்பேர் — பூண்டு
முழுநிலம் உய்ய மொழிபயி லுற்றார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (2)

சைவ தபோதனர் ஏத்தும் — திருத்
தமிழ்முனி தந்த வரத்தின் உதித்தார்
ஐயிரண் டாம்பரு வத்தே — வீதி
அணுகுந் துறைசை முனிவரைக் கண்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (3)

கண்ட முனிவரைப் போற்றி — 'எனைக்
கடைக்கணித் தையன்மீர் என்மனை எய்தி
உண்டுபின் சென்றிடல் வேண்டும்' — என்றே
உபசாரம் செய்ய அவரும்அங் குண்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (4)

அன்றடி யார்க்கமு திட்ட — தம
தன்னை 'அருந்ததி' என்று புகழ்ந்து
துன்று முனிவர்க ளோடும் — தெய்வத்
துறைசை மடாலயம் சென்று புகுந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (5)

எமைத்தடுத் தாண்டமெய் கண்ட — நாதன்
எழில்மர பிற்கொரு பாநுவாய் வந்த
நமச்சிவா யன்றாள் வணங்கி — அங்கு
நண்ணிய வேலப்ப நாதன்றாள் பூண்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (6)

வேலப்ப தேசிகன் தன்பால் — சைவ
மேன்மைச்சந் யாசமும் தீட்சையும் கொண்டு
சீலத் தியல்பினில் நின்றார் — அவர்
சிவஞான யோகி எனப்பெயர் பெற்றார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (7)

'வேதம் பசுஆ கமம்பால் — நால்வர்
மெய்ம்மொழி நெய்சுவை யாம்சிவ ஞான
போதம் இவைமுத லாகும் — சைவப்
புண்ணிய நூல்விரைந் தோதி அமர்ந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (8)

எழுத்தைந் தியல்பையும் தேறி — உயிர்
எய்தும் அவத்தையொர் ஐந்தினும் ஐந்தை
வழுத்து முறைகண்டுள் ளீடா — அங்கு
மருவுமெய் யாற்சிவ போகத் திருந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (9)

மெய்கண்ட நாதன் அளித்த — உண்மை
மேவு சிவஞான போதப் பொருளைக்
கைகண்டு கொள்வதற் காக — தெய்வக்
காட்சியால் மாபா டியம்வகுத் துற்றார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (10)

அத்துவிதப் பொருள் தேறார் — விசிட்
டத்தோடு கேவலம் பேதமுங் கொள்ள
அத்துவிதம் சுத்தம் என்றே — சொல்லி
அன்மைப் பொருள்கொண்டிங் குண்மை
ஆனந்தம் ஆனந்தம் தோழி. [பதித்தார்

சித்தாந்த பாடியங் கண்டார் — மெய்ம்மை
தேறாமல் ஒன்றே பொருளென் றுரைத்தார்
பித்தாந்த மீதுகொண் டோடி — நாங்கள்
பிழைப்ப தினியில்லை யென்றே அகன்றார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (12)

பேதவா தந்தலைக் கொண்டார் — இனிப்
பேசுவ தொன் றுளம் மாவில்லை நாமும்
ஏதம் அடைந்தனம் என்றே — தலை
இறங்கி மறைவின் ஒடுங்கி யிருந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (13)

கடவுளுக் குப்பரி ணாமம் — சொல்லிக்
காலம் கழிப்பவர் தாங்களும் அந்தோ
இடமிலை எங்களுக் கென்றே — தங்கள்
ஏட்டிதழ் தாங்களே கூட்டிஓட் டந்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (14)

வேதமோ டாகமந் தாமும் — அண்ணல்
மெய்ந்நூ லெனக்கொண்ட சித்தாந்த சைவர்
நாதன் திருவருள் வாழ்த்தி — ஈது
நங்கள் தவப்பய னென்றுகைக் கொண்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (15)

எழுத் தொடெண் கண்ஆ தலிறல் — யாரும்
ஏத்துந்தொல் காப்பியம் சூத்திர விருத்தி
விழுத்தகை அன்னம்பட் டையம் — நன்னூல்
விருத்தியும் பாடியங் தங்கமா வைத்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (16)

மேதகு காஞ்சிப் புராணம் — புகழ்
விளங்குபிள் ளைத்தமிழ் அந்தாதி எல்லாம்
மூதறி வால்உரைத் திட்டுச் — சைவ
முதன்மை வெளியிட் டெமக்களி யிட்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (17)

கச்சியப் பன்றமிழ்க் கூடல் — அண்ணல்
கலைசை மதுரக் கவியிவ ரோடும்
கச்சிச் ச்ரவண பத்தன் — முதற்
கவிஞர்ஈ ராறுபேர் சீடரா னின்றார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (18)

திருப்பா திரிப்புலி யூரில் — முன்பு
தீட்டிய பாமுடி யாமலே நிற்ப
இரப்பாளுெர் அந்தணன் வேண்டத் — தீட்டி
இன்பொடு செம்பொனுெர் நூறும் அளித்தார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (19)

அண்ணுமலையின் முனிவன் — உயிர்
ஆகும் சிவசமம் என்றுரை காண்டல்
ஒண்ணு தெனமறுத் திட்டு — மற்றவை
துண்மையின் ஈதென் றுரைத்தெமை ஆண்டார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (20)

சைவப் பயிர்தழைத் தோங்கத் — தெய்வத்
தமிழ்செய்த மாதவத் தாலிவ் வுலகில்
உய்வைத் தரவந் தருளும் — எங்கள்
ஒப்பில் சிவஞான மாமுகில் வாழி
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (21)

சிங்கை வளம்பதி வாழி — தெய்வச்
செந்தமிழ் மாபா டியம்வாழி யூழி
எங்கள் உலகாளும் வாழி — அவள்
இடங்கொள் இறைவர் கருணையும் வாழி
ஆனந்தம் ஆனந்தம் தோழி. (22)

# ஸ்ரீ சிவஞானசுவாமிகள் பதிகம்

## (வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளை இயற்றியது)

சேந்தனைச் சிவபி ரானைத் திருவுள மகிழ்ச்சி செய்யு
இந்தமிழ்ப் புலமை வாய்ந்து சிறந்துவீற் றிருக்க லாகும்
தேந்துணர்ப் பொழில்சூழ் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
பூந்துணைப் பாதம் போற்றும் புண்ணியம் பொருந்தி னோர்க்கே

குறுமுனி யருள்பெற் றோங்கிக் குலவுதொல் காப்பி யன்றான்
பெறுமியற் புலமை வாய்ந்து பிறங்கிவீற் றிருக்க லாகும்
செறுவினிற் கயல்பாய் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
நறுமலர்ப் பாதம் போற்றும் நற்றவம் பொருந்தி னோர்க்கே.(2)

விரிக்குமெய்ந் நூல்கட் கெல்லாம் விழியெனு முயர்ச்சி பூண்ட
தருக்கமெய்ப் புலமை வாய்ந்து தருக்கிவீற் றிருக்க லாகும்
திருக்கிளர் வளமார் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
மருக்கிளர் பாதம் போற்று மாதவம் பொருந்தி னோர்க்கே. (3)

புவனங்க ளுள்ளு தோறும் புலமகிழ் சிறப்ப நல்குங்
கவனநற் புலமை வாய்ந்து களித்துவீற் றிருக்க லாகும்
சிவமணங் கமழுஞ் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
உவமனில் பாதம் போற்றும் உயர்தவம் பொருந்தி னோர்க்கே.

தருங்கிக ரனைத்து நூலுந் தக்கவா நுணுக ஆய்ந்து
பொருளுரை புலமை வாய்ந்து புகழவீற் றிருக்க வாகும்
தெருவெலாம் இசைசேர் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
திருமலர்ப் பாதம் போற்றுஞ் செழுந்தவம் பொருந்தி
[னோர்க்கே. (5)

ஒருமொழிப் பொருளை ஈதோ றுணர்மொழிப் பொருள தாகத்
தருமொழிப் புலமை வாய்ந்து சதுரின்வீற் றிருக்க லாகுந்
திருமகிழ்ந் துறையுஞ் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
நிருமல பாகம் போற்று நெடுந்தவம் பொருந்தி னோர்க்கே. (6)

காட்டிமெய்ப் பொருளீ தீது கழிபொரு ளாமென் றொன்றை
நாட்டுமெய்ப் புலமை வாய்ந்து நயப்பவீற் றிருக்க லாகும்
தேட்டமெய்ப் புகழார் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
ஈட்டிசைப் பாதம் போற்றும் இருந்தவம் பொருந்தி
[னோர்க்கே. (7)

வேதமொ டாகமத்தின் மெய்ப்பொருள் உணர்ந்து ஞான
போதமெய்ப் புலமை வாய்ந்து புகலவீற் றிருக்க லாகும்
சீதவண் பொழில்சூழ் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
கோதிலாப் பாதம் போற்றும் குளிர்தவம் பொருந்தி னோர்க்கே

கொத்தல ரிதழி வேய்ந்த கூத்தனெம் பெருமான் பாத
பத்திமை ஞானம் வாய்ந்து பரவிவீற் றிருக்க லாகுஞ்
சித்திர வளஞ்சேர் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
வித்தக பாதம் போற்றும் விழுத்தவம் பொருந்தி னோர்க்கே. (9)

உள்ளக மலரின் மேலாய் ஒளிர்சிவ போக மென்னும்
வள்ளிய தேறல் மாந்தி மகிழ்ந்துவீற் றிருக்க லாகுந்
தெள்ளிய பொழில்சூழ் சிங்கை திகழ்சிவ ஞான தேவன்
விள்ளலர்ப் பாதம் போற்றும் வியன்தவம் பொருந்தி
[னோர்க்கே. (10)

## ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் பிள்ளைத்தமிழ்

**(முதல் ஐந்து பருவங்கள் வீ. திருஞானசம்பந்த முதலியா ராலும், பின் ஐந்து பருவங்கள் வை. செல்லையாச் செட்டியாராலும் பாடப்பெற்றன.)**

### காப்பு

மணிகொண்ட வாடகக் கிம்புரிப் பூணொடு
வளைந்தவொரு கோடுமுச்சில்
மன்னுமிரு நீள்செவியும் வானுலவு முகிலென்ன
வாக்குமும் மதமுநான்ற
அணிகொண்ட மணிவாயு மடியவர் தமக்கெலா
மாபத்து வேளைதன்னில்
அஞ்சலென் றருளுமெய்க் கருணைநோக் குமுடைய
வைங்கரனை யஞ்சலிப்பாம்
திணிகொண்ட நாலைந்து தோள்கொண்ட வேந்துமுன்
சீர்கொண்ட மாகயிலையைச்
சேண்கொண்ட தன்னிலங் கைக்கென வெடுத்தநாள்
திறங்கெட வழுத்துமணமார்
கணிகொண்ட தண்கொன்றை யம்பர வணிந்தவன்
கருணைவிழி பெற்றுமகிமை
கருதரிய விக்கிரம சிங்கபுரம் வாழவரு
காவலன் தமிழ்தழையவே.

# காப்புப் பருவம்

## திருமால்

சீர்தங்கு பார்த்தனுக் கிரதசா ரதியெனத்
திகழுநா ளிரணமதனிற்
சிரநோக்கி வந்தகோல் சேகரம தாகிடத்
தேரினைப் பாரிறக்கிக்
கார்தங்கு மலகையாம் பூதனை யெனும்பெணின்
கலசமுலை யமிழ்துமுயிருங்
கான்றிடப் பருகியு மிடைத்தொழி லியற்றிடுங்
கரியமா லினிதுகாக்க
ஏர்தங்கு நுண்ணிடைச் சிறுமியர்த முகமான
விந்துவைக் கண்டுவாவி
யேய்ந்திடுஞ் செவ்வல்லி மலரச் சுரும்பின
மியைந்ததன் மீதுசுலவப்
பார்தங்கு மவர்வன்னி மீதெழும் புகையெனப்
பதறியங் கரநெரித்தே
பளிக்கறை மறைந்திடுந் தண்டலைத் துறைசையம்
பதிஞான பாநுதனையே. (1)

## சிவபெருமான்

காராரு மாணவ மலத்திடை யழுந்திக்
கலங்குறு மனுக்கடம்மைக்
கருணையி னெடுத்துடல மாதிமா யையினீந்து
கன்மவொப் புறுதல்கண்டு
பாராரு மெய்ஞ்ஞான குரவனுய் வந்துமேற்
பசுபாச வியல்புணர்த்திப்
பாசங் கெடுத்துநற் பரமுத்தி சேர்க்குமெம்
பரமனடி யஞ்சலிப்பாம்
சீராரு மறிவாளர் தங்களுக் கின்னலே
செய்யினுங் கொள்ளாதுதாஞ்
செம்மையே செய்திடுஞ் செய்கைவிழை யத்தனது
சென்னியுற வோச்சிநிதமும்
ஏராரு நற்சுண மிடிக்குறு முலக்கையா
லெழின்மாதர் தாக்கவுந்தெங்
கிளநீ ருதிர்க்குறுங் கோகழிச் சிவஞான
வேந்தலைக் காக்கவினிதே. (2)

## உமாதேவியார்

திருமருவு புகழ்நீடு காஞ்சியம் பதியினில்
திகழுமதி நதியரவணிச்
செஞ்சடைக் கூத்தனிட மிருநாழி நெற்கொண்டு
செம்மைவே ளாளர் தம்மாற்
பெருமைமிகு முப்பத்தி ரண்டறந் தாரணி
பிறங்கிடச் செய்தகருணைப்
பீடுகெழு பெண்ணரசி பங்கயப் போதுநாம்
பேணியன் பாற்றுதிப்பாம்
தருமருவு மும்பருல கத்தர மடந்தையர்
தரணிவர வெண்ணியங்குச்
சார்ந்துயரு மாளிகைச் சோபான வழிகண்டு
தளராது பாரிறங்கி
மருமருவு தண்டலைச் சூழலின் மாதரொடு
வண்டலாட் டுற்றேகுநல்
வளமருவு கோமுத்தி புரமருவு சிவஞான
மாமுனி தனைக்காக்கவே. (3)

## முருகக்கடவுள்

பூமேவு மாதுறையு மார்பனொடு விதியும்
புரந்தரனு மாதிபுலவர்
புகலடைந் தின்றுமை சூராதி கொடியவர்கள்
புரிசெயல் புகன்றிட்டநாள்
தேமேவு வாகைபுனை சத்தியா லப்பகைவர்
திணியுட லறுத்தவர்க்குச்
செம்மைவாழ் வுதவுசே னாபதிக் கடவுளைச்
சிந்தைவைத் தேத்தெடுப்பாம்
மாமேவு நாமகள் வீற்றிருப் பதுமான
வாலிறைப் பெடைமராளம்
வாவிமரை மலர்மே லிருந்தவவ் வேலையில்
வாருணம் பானுமறையக்
காமேவு வோதிமச் சேவல்தன் காதன்மனை
காணாது போதலர்த்திக்
கண்டுகளி கூர்துறைசை மாதவச் சிவஞான
கற்பகத் தைக்காக்கவே. (4)

**மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்ததேசிகர், உமாபதிசிவம், நமசிவாயமூர்த்தி, பின் வேலப்பதேசிகர்.**

தென்பொழிற் றிருவெண்ணை மெய்கண்ட தேவநற்
சித்தியரு ணந்திதேவன்
சீர்கடந் தைப்பதியின் மறைஞான சம்பந்த
தேசிக னுமாபதிசிவம்
மன்னெழில் துறைசையம் பதிவீற் றிருந்தருள்செய்
மாநமசி வாயதேவன்
வாழிபின் வேலப்ப தேசிகனொ டாதியிவர்
மலரடிக ளஞ்சலிப்பாம்
பொன்னிழைத் துறுமிழை யணிந்தமட மாதரார்
பொன்னூச லாடுந்தொறும்
பூகமடி யோடலைந் துறுமசைவி னுன்முடிப்
பூம்பாளை முத்துதிர்க்கும்
பன்னுமீ ரேழாவ தாண்டுட னமைந்தவெம்
பஞ்சா னனப்பெயரினும்
பதிமருவு மானந்த நடனர்மயி லம்மையிவர்
பாலனைக் காக்கவென்றே. (5)

**வைரவக்கடவுள், பிரமதேவன், இந்திரன், இலக்குமி, சரசுவதி, காளி, சத்தமாதர், உருத்திரர், மருத்துவர், வசுக்கள், சூரியன்.**

மடல்கொண்ட மணமாரும் வனசம் பிலுற்றுதேன்
வாரியா வண்டுதிர்க்கும்
மகரந்த மெருவதா வயல்வினைந் தனசாலி
வானுலவு பரிதி ஞாங்கர்ச்
சுடர்கொண்ட வாடகக் காம்புடைக் கவரிவெண்
டொகைபோல நின்றசைவுறுஞ்
சொல்லரும் பானல்புடை சூழ்துறைசை மாதவத்
தூயவனை யினிதுகாக்க
திடர்கொண்ட வாகுவடு கனுமம் புயத்தனுந்
தேவதரு வுக்கிறைவனுஞ்
செந்தா மரைப்பொறியும் வெண்டா மரைப்பெணுஞ்
சீர்கொண்ட மாகாளியும்

புநீர் கொண்ட கடிதடத் தொருசத்த மாதரும்
 கருருத் திரர்மருத்வர்
பர்சூறு வசுக்கள்பக லோனுமிவ ராதியாம்
 பண்ணவர் தமைப்போற்றுவாம். (6)

**காப்புப்பருவம் முற்றிற்று**

## செங்கீரைப் பருவம்

சீர்பூத்த திருமேனி மஞ்சனத் தாட்டியொண்
 செம்பங் கயத்தன்னநின்
திவ்விய முகத்துல கிழைத்தபொட் டிடுபுசெந்
 தேனூறு திருவாயினிற்
பேர்பூத்த வண்டிறைற் பாலூட்டி யுச்சியிற்
 பிறையன்ன சுட்டிசேர்த்துப்
பேசிரு கரங்களுக் குப்பிடிக மிட்டொளி
 பிறங்கடித் தாமரைக்குக்
கார்பூத்த கல்லிழைத் திடுதண்டை பூட்டியிக்
 கவினுற்ற வுருவத்தினைக்
கண்டுகளி கூரமா மயிலம்மை யடியனேன்
 'காரிரு ளகன்றோடவே
தேர்பூத்த தென்று டுதித்தநற் செல்வனே
 செங்கீரை யாடியருளே
செந்தமிழ்ச் சுவையுண்ட சிவஞான முனிவனே
 செங்கீரை யாடியருளே. (1)

அல்லிரு ளகன்றிடக் கதிர்கான் மதிக்கடவு
 ளாருச்சி நீங்கவொண்ணு
தாறலைக் கும்பொழி லமர்ந்துறு குரக்கினமி
 தாமிரக் கனியென்னவே
ஒல்லையி னெழுந்துமேற் பாயவத ஞர்ப்பினுக்
 கொல்கிநெற் போர்கண்டுகீ
ழுற்றசூழ் கொண்டலை வயன்மள்ளர் தம்மிரும்
 பொத்தகோட் டெருமையோடு
வல்லுறப் பூட்டியே ரோட்டிட விடிக்குரல்
 வாய்விட் டரற்றியோடும்
வளமருவு தண்டலைத் துறைசையம் பதிவாழ
 வந்தவெங் கருணைவாழ்வே

சில்லணி சிரந்துளக் குடபுசைவ தீபமே
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்ச் சுவையுண்ட சிவஞான முனிவனே
செங்கீரை யாடியருளே. (2)

மன்னிய சிருட்டிமுதன் மூன்றினை யுருத்திரன்
மாலயனும் வாய்ந்துதத்த
மாத்தொழி லியற்றிடப் பேரருள் சுரந்தகூன்
மதியணி சடைக்கடவுள்முன்
பன்னிய பெருங்கணத் தேவன் றனக்கருள்
பரசுசிவ ஞானபோதம்
பாருலகி னின்றிட வதற்கொரு விருத்திமா
பாடியம் வரைந்தநின்ற
னுன்னிய திருக்கர நிலத்தினிடை யூன்றிமற்
றொருமுழந் தாளையூன்றி
யொருமுழந் தாள்பினுற நீட்டியே வில்லுமிழு
மொண்மணிச் சுட்டிசேர்ந்த
சென்னிய தசைந்திடச் சித்தாந்த வண்ணலே
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்ச் சுவையுண்ட சிவஞான முனிவனே
செங்கீரை யாடியருளே. (3)

வேறு

சயமுறு நால்வ ரருந்தமிழ் மாமறை
சார்ந்தெவ ரும்பாடத்
தாவறு நான்மறை யாகம நெறிதுறை
சர்ச்சனர் கொண்டாட
அயர்வுறு பரசம யக்கழு தஞ்சி
யலைந்தன வாயோட
வார்மல மாய்ந்தெளி நாயடி யேனுன
தடியிணை யிற்கூட
நயமுறு சைவவ ருங்கலை மாதவர்
நன்சுக மேவுற
ஞான வரும்பெரு மாதவ நன்னெறி
நனியுல கினிலீட

அயனரி பரவுறு மாவடு துறைமுனி
ஆடுக செங்கீரை
அன்புரு வாஞ்சிவ ஞான அருந்தவன்
ஆடுக செங்கீரை. (4)

மருவமர் பரசம யக்களி றோட
வரும்பஞ் சானனமே
மண்டலம் வாழச் சைவப் பயிரை
வளர்த்த பசும்புயலே
கருவற வாருயி ராணவ விருள்வலி
கடியு மிருங்கதிரே
காசினி யிற்சிவ போதம் விரித்திசை
கஞல்கரு ணைக்கடலே
பொருவரு பூதிய ணிந்த புரந்திகழ்
புண்ணிய மெய்ப்பயனே
புல்லறி வோடவொ ழித்தெனை யாண்டருள்
புனிதகு ணக்குன்றே
அருமறை யோர்வதி கோகழி யாண்டவன்
ஆடுக செங்கீரை
அன்புரு வாஞ்சிவ ஞான அருந்தவன்
ஆடுக செங்கீரை. (5)

**செங்கீரைப் பருவம் முற்றிற்று**

## தாலப் பருவம்

திங்கள் வதனச் சிலைநுதலார்
திரண்மா மதிக்கல் லாலிழைத்த
செம்பொற் றலத்து மாளிகையின்
சிகரத் தரிந்த வகிற்புகையால்
தங்கள் கூந்தல் தனைப்புலர்த்தத்
தருவிற் றங்கு மயிலினங்கள்
சலங்கொள் மேக மென்றெண்ணித்
தழையுந் தோகை விரித்தாடப்
பொங்கு நகையின் மிகுநிலவைப்
புட்ச கோரந் தானருந்தப்

புதுமென் மலர்க ளளிக்குலங்கள்
　　பொழிதே னுண்ணும் பொழில்ஞாங்கர்ச்
சங்க முரலும் புணைத்துறைசைத்
　　தலைவா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த
　　சைவா தாலோ தாலேலோ. (1)

கால்பாய் வாவி வயின்படிந்த
　　கயவாய்ச் செங்கட் கருங்கோட்டுக்
கவரி யினம்பூப் பலகறித்துக்
　　கான்று கன்று தனைநினைத்துப்
பால்பாய் தருமா றாற்றவதன்
　　பரப்பின் திரையா லலைந்தசையும்
பங்க யத்தோ திமங்களெலாம்
　　பயந்தார்த் தகல்வான் பறந்தோடச்
சேல்பாய் மருதப் பூம்பணைசேர்
　　சிகரத் துறங்கக் கொண்டலினம்
திகழுஞ் சோலை விக்கிரம
　　சிங்க புரத்திற் றேன்றுமருட்
சால்பார் கற்பின் மயிலம்மை
　　தனயா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த
　　சைவா தாலோ தாலேலோ. (2)

தண்ணம் பசுங்கல் தூணிறுவித்
　　தழைத்த துகிர்விட் டங்கிடத்தித்
தரளக் கோவை நான்மருங்குந்
　　தாழ வயிரத் தாம்பிறுக்கி
வண்ண வொளிச்செம் மணியிழைத்த
　　மாசைப் பெருந்தொட் டிலினிறுத்தி
வடுவஞ் சனக்க ணாரிவிடையை
　　மருவு மடந்தைத் தாதியர்கள்
பண்ணு மிசையுஞ் சேர்ந்தமைந்த
　　பாக்கள் பலவு மிசைத்தாட்டப்
பார்த்துக் களிக்கு மயிலம்மை
　　பயிற்றுந் தவத்துப் பயனுமை
தண்ணம் புலிமா னிகைத்துறைசைத்
　　தலைவா தாலோ தாலேலோ

சாற்றும் பெருமைச் சித்தாந்த
சைவா தாலோ தாலேலோ. (3)

அன்னங் கடுக்கு மடநடையும்
அமுதங் கடுக்கு மென்மொழியும்
அமைந்த மடவார் குழல்புலர்த்தும்
அகிலின் புகையாற் செங்நெலினைப்
பன்னுங் கடைசிச் சிறுமியர்கள்
பைங்கட் கரும்பே யாமெனவும்
பாகுக் கரும்பைக் கழுகெனவும்
பகர்ந்து கூடித் தத்தமனம்
உன்னித் துணிந்த படியாக
உரைத்து உரைத்துப் பெருமாயா
வோதத் தழுந்தித் தடுமாறு
மொவ்வாச் சமயம் போன்மயங்குந்
தன்மைக் கழனித் துறைசைநகர்த்
தலைவா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த
சைவா தாலோ தாலேலோ (4)

**வேறு**

சேடு விரைப்புனி தப்பொனி நீள்கரை
சென்று குயிற்றுமணற்
சிற்றி லழித்தலை செல்லுதல் கண்டு
செயிர்த்தெமை யீன்றாள்தன்
மாடு பகர்ந்துனை யச்ச முறுத்துவம்
வல்லையி னென்றகலும்
மள்ள மடந்தையர் நீக்கி எறிந்த
மணிக்கா தோலையொளி
நீடு கதிர்க்கவி ரின்மல ரேய்க்க
நடப்பவர் நீளாறு
நேர்புலம் பேதுறுக் கும்பல வின்கனி
நீள்வால் மந்தியினஞ்
சாடு பொழில்திரு வாவடு துறைமுனி
தாலோ தாலேலோ
தாள்மலர் பற்றெனை யாளும் உயிர்க்குயிர்
தாலோ தாலேலோ. (5)

**தாலப்பருவம் முற்றிற்று**

## சப்பாணிப் பருவம்

பொங்கொளி பரந்தமணி மாளிகையின் மேலுறும்
புனிதமட மாதர்வானில்
பொலிதரும் இராக்கதிர் விளித்துத்தம் மார்புறப்
புயமீ தணைத்திருத்தித்
துங்குமவ னெழிலுற்று நோக்கிநாங் கூவிடுஞ்
சமயத் தெலாம்வருகெனச்
சாற்றிவா னேகவிட் டேகுறும் வளந்தங்கு
தண்துறைசை வீற்றிருந்து
புங்கவ ரெலாங்கண்டு நெஞ்சமகிழ் வுறவுறப்
புரத்தர்மர பின்கண்டனம்
பொன்ற வதனுக்கொரு விருத்தியுறு கண்டனம்
பொறித்தவயி ரத்திழைத்த
தங்கக்கை யணிகொண்ட புங்கக் கரங்கொண்டு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (1)

ஓங்குகயி லாயத் திருந்தருள் பரம்பொருள்
உயர்கங்கை யும்பிறையையும்
உரைதரு பிதாமகன் கேசவன் தலைமாலை
யுங்கொன் றை யும்போகியுந்
தேங்கொளிக் கறைமிடறு மழுவுமின மானொடு
செஞ்சடையும் இனையவாகச்
செப்புமிவை யாவுங் கரந்துபின் வேலப்ப
தேசிக னௌவுதித்துப்
பாங்கினடி யார்மலக் காடற அழித்துமெய்ப்
பத்திவித் திட்டெழிலுறும்
பசுமுத்தி புரமேவ வீற்றினி திருந்தவன்
பாற்சமய முதன்மூன்றையும்
தாங்கிநல் துறைசையம் பதிமேவு சைவனே
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (2)

மருமருவு மென்கூந்தல் அஞ்சனக் கண்ணுடை
　　மடந்தையரும் வெங்கோபமார்
மடங்கலனையாரும் புணர்ச்சிப் பெரும்பூசல்
　　மருவஅத ளுலணிந்த
திருமருவு செந்தா மரைத்தொடை அலைந்துகீழ்ச்
　　சிந்துமகரந்தங்களும்
செம்பஞ் சுலர்ந்துகொட் டுந்துகளும் மார்பினில்
　　செங்குங்கு மத்துகளுமாய்க்
குருமருவு சைவலக் குண்டகழி மூடிடக்
　　குடைவேழ மொண்கரத்தால்
கொங்கம்பு கொண்டுநொச் சிக்கொடி கிழித்
　　கொண்மூத் துவாரம்வீசத் [தமைக்
தருமருவு வான்மணங் கமழ்துறைசை மாதவன்
　　சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
　　சப்பாணி கொட்டியருளே. (3)

வம்புறு மலர்க்குழல் சேல்நெடுங் கண்துகிர்
　　வாய்மரைக் கோங்கரும்பார்
வாரணி கனக்கொங்கை மாதர்தங் காலணி
　　மணிச்சிலம் பின்முழக்கும்
அம்புறு கருங்கொண்ட லின்முழக் கும்வீரர்
　　அணிகழன் முழக்குமழலை
யார்சிறு மகார்தமார் பணிந்தஜும் படையிஞே
　　டார்கிண் கிணிமுழக்கும்
நம்புறு மறச்சாலை யிட்டிசெய் திடுசாலை
　　கடனசாலைகள்முழக்கும்
நான்மறை முழக்கமுந் தீந்தமிழ் முழக்கமும்
　　நண்ணரச வனமேவிடுஞ்
சம்புவினை யேபூசை செய்யுந் திருக்கைகொடு
　　சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
　　சப்பாணி கொட்டியருளே. (4)

**வேறு**

புண்ணிய மெய்ப்பயன் கொள்ள விளைந்திடு
　　போதப் பிருதிவியே
போற்றுசித் தாந்த நெறிப்பயி ரோங்க
　　வளர்த்த பசும்புனலே

எண்ணிய வெவ்வினை யாரணி யத்தை
எரித்த இருங்கனலே
இட்டுறு பரசம யத்துகள் வீய
எடுத்தெறி யும்வளியே
பண்ணிய மெய்த்தவ ருள்ளம் நிலாவி
விரிந்து பயில்வெளியே
பாலனெ னெஞ்சு பதிந்து பரந்து
விளங்கு பரஞ்சுடரே
தண்ணிய அன்புரு வான பெருந்தவ
கொட்டுக சப்பாணி
தண்டலை சூழ்புடை கோகழி மாமுனி
கொட்டுக சப்பாணி. (5)

**சப்பாணிப்பருவம் முற்றிற்று**

## முத்தப் பருவம்

கன்னற் படுசித் திலமொடுபைங்
கழையிற் படுசித் திலமுமழைக்
கடமாக் கோட்டுத் தரளமுமென்
கதலித் தரள முங்கொடுசீர்
உன்னற் கரிதாய் வரும்பொன்னி
ஓதத் திரைக்கை யாற்குவிக்க
ஓங்குங் குவட்டின் பொருப்பேறி
ஒளிமென் கூந்தல் சிறுமியர்தாம்
பன்னும் விசும்பில் பொலிவுறும்வெண்
பனிமா மதியின் கலசமிர்தம்
பருக நினைத்துத் துணைக்கரத்தால்
பற்று மருதப் பெருவளமை
முன்னுந் துறைசைப் பெரும்பதிவாழ்
முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான
முனிவா முத்தந் தருகவே. (1)

ஆடுங் கறங்கிற் பலயோனி
அலமந் தழுங்கிப் பிறந்திறந்தே
அல்லற் படுமித் துயர்நீங்க
அருமைப் பெருஞ்சா தனநெறிதான்

வாடும் புலிவாழ் பவர்தமக்கு
 மன்னுஞ் சரியை முதன்மூன் றும்
வரப்பெற் றதன்மேல் ஞானமெனும்
 மார்க்கம் நாடிச் சகலகலை
கூடு ஞானஞ் சாத்திரங்கள்
 கூறும் பொருள்கள் கீழெனவே
கொண்டு கழித்துச் சிவத்திநெறிடும்
 கூடு மிதுவே எனமொழியு
மூடுந் துருமக் கோகழிவாழ்
 முதல்வா முத்தந்தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான
 முனிவா முத்தந்தருகவே. (2)

அண்டர் துதிக்குந் தண்டகநாட்
 டமரும் பழைய னூரவையில்
அல்லல் புரியு நீலியைக்கண்
 டஞ்சி நடுங்கும் வணிகனுக்கா
வண்டு தளிர்ச்செங் கரமனைவி
 மருவி வாழ்நின் னுயிர்க்கிறுதி
வருமே லாவி துறப்பமென
 வன்னி மூழ்கி மொழிகாத்துக்
கொண்ட பெருமை யாலவனக்
 கூத்தர் பாதஞ் சேர்ந்தவர்தங்
குலவு வேளாண் மரபினிலங்
 குரித்துச் சைவப் பொருள்விரிக்கு
முண்ட கச்செந் தடத்துறைசை
 முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான
 முனிவா முத்தந் தருகவே. (3)

கொம்மைப் பெரும்ப யோதரமென்
 கூந்தற் கருங்கட் சிறுமாதர்
கூடிக் களித்து விளையாடுங்
 குருநீ லச்செய் குன்றினெளி
செம்மைப் பொன்னாட் டினிற்பரவச்
 சீதத் தருவிங் கிழன்மேவுஞ்

தெய்வச் சுரபி பசும்புலெனச்
செந்நா வளைக்கும் பைம்பொழில்வாய்ச்
சூழ்மைச் சுருதி நாகணவாய்
சொல்லச் சுகங்கள் முறைபயிலுந்
தொன்மைப் பெருஞ்சீ ராவடுதண்
துறையில் அமரும் குலமணியே
மும்மைத் திமிர மறக்களைந்த
முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான
முனிவா முத்தந் தருகவே. (4)

உருவா முடம்பே யாமென்றும்
ஒழிகூ ளியமே யாமென்றும்
உழலும் பொறியே யாமென்றும்
உரைக்கும் புரியட் டகமென்றும்
அருவாம் பிராணக் காலென்றும்
அழியாப் பிரம மாமென்றும்
அறைந்த இவற்றின் குழுவென்றும்
அரற்றி அரற்றி உயிரியல்பை
மருவா துண்மை உணராது
மயங்கி மயங்கிப் பிணங்கிடுமிம்
மருவார் கலக மறவுதித்த
மறுவின் மணியே மணிமாடத்
திருவா வடுதண் துறைமருவு
செல்வா தருக முத்தமே
சிவஞா னத்துப் பெருநாமச்
சித்தா தருக முத்தமே. (5)

முத்தப்பருவம் முற்றிற்று

## வருகைப் பருவம்

தேசுற்ற செம்மணி செறித்திழைத் திடுமாட
சிகரபந் திகளளவிலாத்
தினகரர்க ளோய்ந்துநற் பகலிரவு தெரியாது
செய்யும்வெயி லான்மயங்கிக்
காசற்ற பதுமமெக் காலும்வாய் குவியாது
கண்மலர்ந் திடவுமாம்பல்

காதல னுதிப்பவு மயங்கிமல ராமலெக்
காலுமுகி ழாகவுமுறும்
பேசுற்ற பெருவளம் பெறுவிக்கி ரமசிங்க
பேரமர் புரத்துதித்தே
பேணிவரு வேலப்ப தேசிக னருட்பேறு
பெற்றுச் சிறந்தபெரியோய்
ஏசற்ற சிவஞான மாமுனிவ னேமகிழ்ந்
தேழையேன் முன்வருகவே
எத்தவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
எந்தம் பிரான்வருகவே. (1)

பங்கய மெனப்பொலிவு தங்குவத னக்குமிழ்
பதித்துநான் றசைபுலாக்கிற்
படுவயிர மணியதர வொளிவிழியி னுளியளாய்ப்
பரவுதலி னுற்குன்றியின்
பொங்குமணி யேய்ப்பப் புலந்தவை துறந்திவை
புனைந்தனன் எனப்பதைத்துப்
போற்றியிவை கொள்ளே லெனக்கணவ ருரைசெயப்
புன்னகை இயற்றுமடவார்
தங்குமே னிலையினிற் சாளரத் தாடியில்
சந்திரன் உலாவுமேர்கொள்
தருவிக்கி ரமசிங்க புரமே உதித்தநற்
றண்ணமுத மாசலதியே
இங்குசிவ ஞானமா பாடியக் கையினெடும்
ஏழையேன் முன்வருகவே
எத்தவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
எந்தம் பிரான்வருகவே. (2)

மாமறையி னோசைகிளி வாசனையி னோதுபுடை
வாழ்பொழிலி னூடுமருவும்
வானுலக மேயதரு வாழ்சுகமு மோதுமுறை
வாய்ப்பப் பயிற்றியிடையில்
தூமமென வாழ்முகிலி னுல்வருத லறியாது
துன்னியத் தருவின்வாழுஞ்
சுகமோடு நட்புறீஇ வாழவுங் கிழமைத்
துணையாக வும்பெருவளந்

தாமமுற வாழ்விக்கி ரமசிங்க புரமேவு
தாவிலா வேளாண்குலத்
தகைமைசேர் குலமணித் தீபமாய் அடிமையேன்
தன்மனத் தவிசமர்ந்தோய்
ஏமமுற வோதுமா பாடியக் கையிளுெடும்
ஏழையேன் முன்வருகவே
எத்தவரும் ஏத்துகோ முத்திபுர மேவியுறை
எந்தம் பிரான்வருகவே. (3)

வேறு

திருவார் துறைசைப் பதியமர்தே
சிகன்வே லப்பச் செம்மல்தனுல்
தீக்கை மூன் று மடைந்துதவுந்
திருக்கல் லாடை யணிந்துதவம்
பெருகா னந்தப் பெருங்கடலே
பிறவிக் கடற்கோர் புணையாகப்
பிறங்கும் வெண்ணெ மெய்கண்டான்
பேசும் போதந் தனக்குலகோர்
கருவா தனையிற் கழன் றுசிவன்
கழல்சேர்ந் திடமா பாடியஞ்செய்
கருணைப் பெருக்கே அடியன்மனக்
கமலம் விரிக்குங் கதிரொளியே
தெருளே அளிக்குஞ் சிவஞானச்
செல்வா வருக வருகவே
சித்தத் தினிக்கும் ஆனந்தத்
தேனே வருக வருகவே. (4)

கோனே வருக களங்கமிலாக்
குலமா மதியே வருகஅருட்
குன்றே வருக மெய்ஞ்ஞான
குருவே வருக சிவன்கழலே
ஆளு தறிவோய் வருகஎன
தையா வருக எனதாவிக்
கரசே வருக சிவஞானம்
அளித்திங் கடிமை கொண்டெனையும்
தாளுந் தகைசெய் வோய்வருக
தவத்தோர் புகழுந் தவவருக

தருவிக் கிரம சிங்கபுரந்
தனில்வே ளாண்டொல் குலத்துதித்த
தேனே வருக சிவஞானச்
செல்வா வருக வருகவே
சித்தத் தினிக்கும் ஆனந்தத்
தேனே வருக வருகவே. (5)

**வருகைப்பருவம் முற்றிற்று.**

## அம்புலிப் பருவம்

அம்பரந் தோன்றலா லமுதகலை யுடைமையால்
அகல்தாரை யைத்தழுவலால்
அங்காவி யுடைமையா லவனியோர் புகழ்தலால்
அரியென்று மிலகிவரலால்
பம்புமதி யோனெனப் படுதலா லணியுறும்
பாடுபெற் றுடைமையதனுல்
பரமனக் காமெனக் கோடலா லொப்புமை
பரித்தனை யெனத்தவனிவன்
இம்பரினி லாடுதற் கெண்ணிவா வாவென்
றிணைக்கரம தாலழைத்தான்
இத்தருண நீபெற்ற நற்றவப் பயனலால்
இல்லையிஃ துண்மைவிரைவாய்
அம்பணியு மண்ணலை யறிந்தசிவ ஞானியினொ
டம்புலீ யாடவாவே,
அழகுமலி கோகழிச் சிவஞான முனிவனொ
டம்புலீ யாடவாவே. (1)

பாதிமதி யோனெனப் படுவைநீ நிறைமதிப்
பண்ணவ னிவன்குறைகலைப்
பண்புளாய் நீயிவன் நிறைகலையி னுடற்
படுகளங்கு கொண்டையைநீ
தீதுறு களங்கமரு வுதலிலாத் தவனிவன்
தெரிவையர் மயற்போகிநீ
தேரினவை யில்பரம யோகியிவ னெட்டுணைச்
செய்தியினு மொப்புமையிலாய்

ஓதிலுனே யோர்பொருட் டாயழைத் திடுகருணை
ஒல்லெலன் வுணர்ந்துமுன் செய்
உத்தமப் பயனலாற் பிறிதிலை யெனத்தெளிந்
துன்முக மறந்துவிரைவாய்
ஆதிநடு வீறிலா வம்பொரு ளுணர்ந்தவனே
டம்புலீ யாடவாவே
அழகுமலி கோகழிச் சிவஞான முனிவனே
டம்புலீ யாடவாவே. (2)

மூன்றைந் திரண்டனுரு பிற்றுயில் முராரிதன்
முடியின்மே லடிவைத்துமுன்
முறைமையில் தீக்கைசெய் தருள்முனிவ னுமென
முயங்குமிவ னைப்பெறுதியேல்
தூன்றவெங் கொடுவிடப் பகுவாயி னரவனைக்
கண்டுபற் றுதகலவுங்
கருணைசெய் குவனுடற் படுமாசு நீக்குவன்
கலையென் றும் நிலவவருள்வன்
தோன்றுகுர வன்பன்னி யைப்புணர்ந் திடுதலால்
துலைவிலா மாபாதகத்
துகளறுத் தெண்ணியவை யாவையு மளிப்பனித்
தூயவற் கரியதெவைகாண்
ஆன்றசிவ ஞானபோ தப்பொருள் விரித்தவனே
டம்புலீ யாடவாவே
அழகுமலி கோகழிச் சிவஞான முனிவனே
டம்புலீ யாடவாவே. (3)

உள்ளமாங் கானகத் தைம்புலச் செய்கையா
யுற்றசெடி யாவும்வெட்டி
உயர்வுறும் பத்தியெனும் அலமதா லுழுதுபீக்
குறுமன்பு நீர்பாய்ச்சியே
எள்ளுதலி லாச்சிவம தாகும்விதை யூன்றியே
றிணையற்ற சிவஞானமாம்
எழிலுறும் பைங்கூழை யினிமைபெற வேவளர்த்
தெந்நாளு மிடர்விளைக்குந்
தள்ளுறும் மஞ்ஞான மாங்களை களைந்துநற்
சாயுச்சி யப்பதவியாய்ச்

சாற்றுபல ஙனக்கொண்டு பேரின்ப அமுதுணைத்
தான்சினைப் பிறுமீகுவான்
அள்ளலம் பணைகள்சூழ் துறைசைமா தவனிவனொ
டம்புலீ யாடவாவே
அழகுமலி கோகழிச் சிவஞான முனிவனோ
டம்புலீ யாடவாவே. (4)

செற்றமில னென்றெணிச் சிறுபோது தாழ்த்தியேல்
தீமையள விலவென் றியான்
செப்பிடவும் வேண்டுமோ தேவர்கோ வேயிதைத்
தெற்றென வுணர்த்துமறிவாய்
கற்றையஞ் சடைமுடிக் கண்ணுதற் கினியனுங்
காரண முணர்ந்திலாய்கொல்
கருதிலிவன் வாவென விளித்தும்வா ராமைஅக்
காமாரி சற்றறியுமேல்
உற்றநின் மாதுலற் பெற்றசா பம்புணர
உனைவிலக் கிடுவனந்தோ
ஒல்லெனக் கலையெலாந் தேய்ந்துவீ ழுகுவை
உரைத்தனன் இனித்தாழ்த்திடேல்
அற்றமிகு மைந்தவித் தான்றசிவ ஞானியிெனா
டம்புலீ யாடவாவே
அழகுமலி கோகழிச் சிவஞான முனிவனோ
டம்புலீ யாடவாவே. (5)

**அம்புலிப்பருவம் முற்றிற்று**

## சிற்றிற் பருவம்

பங்கப் பழனத் துறும்வாளை
பகட்டே ரெழுந்து மேதிமுலை
பால்கான் றிடக்கன் றெனமோதிப்
பைங்காய்க் கமுகின் குலைசாடித்
தெங்கின் குலையில் தாயுதிர்த்துத்
தீந்தேன் வருக்கைக் கனிகிழித்துத்
திளைத்து மீண்டு மதிதடவித்
திரைத்துக் கணத்தி னுடுக்களெலாம்

பொங்கப் புவியி லுதறியெரி இப்
யோய்மா வண்ட முகடதனைப்
புடைத்துத் திறந்து வானதியிற்
பொற்ப வாடி விளையாடுந்
திங்கள் துருமத் துறைசைநகர்த்
தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் திறம்பெருக்குஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. (1)

கோவே அழித்து விளையாடுங்
கொள்கை யுளத்துக் கொண்டனையேல்
குறையா தடியேன் றனைவருத்துங்
கொடுமா வறுமை தனையழிக்க
மூவா மற்செம் பிணிற்களிம்பாய்
முயங்கி யடியேன் றனைவருத்தும்
மூல மலத்தை யறவழிக்க
மோக மழிக்க முனிவழிக்க
தாவே யுறும்யா னெனதென்னுந்
தருக்கை யழிக்க இவையழித்த
த்கையா முனக்கு வாலுகத்தால்
சமைத்த இச்சிற் றிலையழிக்கின்
தேவே யெய்தும் புகழுளதோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் திறம்பெருக்குஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. (2)

சகனத் தடவா வியின்முளைத்துத்
தகைசால் நாள மொன்றிலிரு
தண்டா மரைமொட் டலராத
தடைமா வதன மதியமெனக்
ககனத் துறுமென் றெணித்தனது
கதிரால் வதன மதிக்கதிரைக்
கவர்ந்தங் கொளிசெய் தலர்த்திமனக்
களிப்பால் தழுவ லெனப்பணியின்
பகரற் கரிதாய்ப் படுமணிகள்
பலகொண் டியற்றும் பதக்கமுலைப்

பரப்பிற் புரளுந் திருமடவார்
பயில்கந் துகவாட் டயர்வளத்தில்
சிகரப் பன்மா ளிகைத்துறைசைத்
தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் திறம்பெருக்குஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. (3)

பேசுந் தன்மாத் திரைகளைந்தும்
பிறங்கு மனமா திகள்மூன்றும்
பிணைத்துப் புரியட் டகச்சிற்றில்
பேணிச் சிதைத்தங் காணவமாம்
மாசு கழித்துச் சிவானந்தம்
மருவித் திரும்பாப் பெருவாழ்வை
வணங்கு மடியார்க் கருள்பெருஞ்சீர்
வள்ளா லடியே மணலியற்றிக்
கூசு நாணு முணர்வுமிலாக்
குழுவிற் சிறியே மாடுறுமிக்
கொள்கை யுறுஞ்சிற் றிலையழிப்பின்
கொள்ளக் கிடப்ப தொன்றிலையால்
தேசில் திகழ்நீற் றொளித்துறைசைத்
தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் திறம்பெருக்குஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. (4)

சேலிற் பிறழுந் தடங்கண்ணார்
திளைக்குங் காமக் கலவியினில்
செப்புங் காதற் சுவைகனிந்த
தீஞ்சொற் பகற்கிள் ளைகள்புகலச்
சாலத் துறுநாண் கொடுகரத்தால்
தம்வாய் புதைக்குந் திருமடவார்
தகைசால் வதன மதியமெனச்
சாரக் கரும்பாந் தளைவெருட்ட
மாலிற் படுக்குஞ் சாயலினல்
வளங்கூர் தருமே னிலைக்கொடிகள்
மாகத் தரிவை யகப்புரவி
வாவிச் செலச்செய் யுறும்வனப்பில்

சீலத் தவர்போற் றிடுந்துறைசைத்
தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் திறம்பெருக்குஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. (5)

**சிற்றிற்பருவம் முற்றிற்று**

## சிறுபறைப் பருவம்

இங்கணி மிகுந்தொளிரு மங்கையரை யெய்தியவ
ரின்புறப் புணருமதுவே
ஏய்ந்திடப் படுமுத்தி யென்றும் சுவர்க்கமே
இணையிலா முத்தியென்றும்
துங்கமுற வைந்துகந் தங்கெடுதல் முத்தியென்
தூயகுண மருவல்முத்தி
தோன்றறிவி லாதுகற் போலக் கிடத்தலே
தோய்முத்தி என்றுமருளாம்
பங்கமற யானென தெனுஞ்செருக் கறுதலே
படுமுத்தி என்றுமருளும்
பண்பிலார்க் குச்சிவன் றன்னடிப் பேற்றினைப்
பன்னிடு முழக்காமெனச்
செங்கமல வாவிபுடை சூழ்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருள்தவன்
சிறுபறை முழக்கியருளே. (1)

ஒப்பரிய நால்வர்தமி ழோதுறு முழக்கமும்
ஓங்குசித் தாந்தநெறியே
ஓய்விலா தோதுநூற் பொருள்விரித் திடுகுழுவி
னூடுதோன் றிடுமுழக்கும்
செப்பரிய வேதாக மப்பெரு முழக்கமும்
தேசுறும் புலவர்பாடுந்
தீங்கரும் பென்னமது ரம்பெருகி யணியெலாஞ்
சேர்ந்தபல துறையுடைத்தாய்த்
தப்புதலி லாதநற் பாவிரித் துப்பொருள்
தரும்பெரு முழக்கும்அடியார்
தாவிலா தோதுமுக் காலுமா லயமுறீஇத்
தாவெழுப் பிடுமரவொலித்

திப்பிய முழக்கமும் திருத்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருள்தவன்
சிறுபறை முழக்கியருளே. (2)

மூலமுத லாகவுறு மாதலங் காமலமதன்
மூர்த்தியா றையுமோர்ந்தபின்
முறைமையிற் காலிரண் டொன்றுற வியக்கிட
மூளைத்தமுக் கனலெழுப்பி
ஏலமுச் சந்திவட் டத்தினட் டாங்கண்
டிறைஞ்சியங் கெழுசிலம்பின்
இன்னிசை முழக்கது மடுக்கமகிழ் வாரமீ
தெமக்கரி துனக்கரத்தால்
சாலவு முழக்குபறை யோதவொலி கேட்கத்
தகும்பரி வடைந்தனமதால்
தண்ணருட் குன்றமே நின்தளிர்க் கரமுறத்
தமியமா னந்தமடையச்
சீலமுடை யோர்புகழ் திருத்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருள்தவன்
சிறுபறை முழக்கியருளே. (3)

உருவமாய் அருவமாய் உருவருவ மாயவற்
றோருங்குசித் தாந்தநெறியாம்
உன்னரிய வேதா கமக்கருத் தைக்கடந்
தொளிருமா னந்தவொளியாய்ப்
பெருமருவு சத்தியாற் பேணுதனு கரணதி
பேதுறு மனுக்களுக்காப்
பெரிதுங் கொடுத்தளித் தழிவிலா வாழ்வுமருள்
பிறையையணி கடவுளையலால்
கருவிற் பிறந்திறந் துழல்சிறிய தேவரைக்
கர்த்தரென் றறிவிழந்து
கண்டியொடு பூதிவெண் திருநீ றிகழ்ந்துதிரி
கயவர்வா யுறைவதேய்ப்பத்
திருவிற் பொலிந்தணி மிகுந்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருள்தவன்
சிறுபறை முழக்கியருளே. (4)

பற்றற்ற மனமாரும் உத்தமர்க் கித்யம்
பரிந்தரு ளிருஞ்சுடரதாய்ப்
பரவையில் துயில்வோ னருங்கமல பீடனும்
பண்ணவர் தமக்குமரிதாய்
உற்றிடு பெருங்கருணை வாரியா மண்ணலே
உலகமா னிடர்யார்வரும்
ஊனவிழி யாற்கண் டிறைஞ்சிப் பிறப்பென்னும்
உவரியத னைக்கடந்தே
மற்றுநற் றிருவடிக் கரையடைய அருளினால்
மாண்புறக் கொண்டவடிவே
மன்னுமிஃ தாமென மதித்துனை யடைந்தனம்
மறேலிவை யெமக்குவிழைவாஞ்
செற்றமதி லாத்தவ ருறுந்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருள்தவன்
சிறுபறை முழக்கியருளே. (5)

**சிறுபறைப்பருவம் முற்றிற்று**

## சிறுதேர்ப் பருவம்

விண்ணு டுறும்பெரு மணிக்குல மிழைத்துமிளிர்
மேயமா ளிகைமேல்வ்யின்
மின்னனார் தங்கணவ ரோடுடி நீத்தெறி
மிகும்பொனா பரணமெல்லாம்
தண்ணார் பனிப்பகைவ னுறையிரத மதனைத்
தடைப்படுத் தியதுமல்லால்
தங்கதிரி னுலவன் சவிகெட்டு மாழ்கிடத்
தாம்புரி வளந்திகழ்தருங்
கண்ணுயி ரக்கட்டவு ளோடயனு மாலுமனு
தினமுமன திற்கருதுறுங்
கருணையங் கடல்நமசி வாயதே சிகனருள்
கனிந்தவடி யார்குழுவொடும்
திண்ணமுற வாழுமர சூர்ப்பதிச் செல்வனே
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவந்ற றவஞான போர்த்தனே
சிறுதே ருருட்டியருளே. (1)

பொங்குமுழு மதியுமோ கணிமனைவி தன்னொடும்
புல்லியா னந்தமுறலும்
பொற்புடைய ஏனைமனை வியரய லுயங்கியே
புந்திநைந் தொன்றுகூடித்
தங்குதனு மேய்ப்பமூக் கிற்புலாக் கணியது
தயங்கவுங் கந்தரத்தே
தாவிலா வாரமணி மாலைக ளிலங்கவுந்
தமனியக் கிரியதென்றே
இங்குளோ ரெண்ணக் கதிர்த்துப் பருத்தநல்
விளமுலையி னுரைதரமே
*இன்றெண்டை யென்றுகூ ழரியிணைக் கையினில்*
இலங்குமலை ராஸ்விலக்குந்
திங்கள்முக மாதரணி தங்குகோ கழிநாத
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (2)

பம்பிமணி மங்குல்தவழ் வெண்கொடி விணூர்நதி
பரிப்பவம் மைத்தடிப்பே
படுவாளை மீனுகளு வதையொத்த மாளிகைப்
பந்திசூழ் மேனிலையினில்
கம்பையந் தந்தைக் கனத்தைச் சினத்தெழுந்
கண்டமிடை யைம்பாலுடைக்
கன்னியர்த மின்னுயிர் காதல ரொடுந்தழீஇக்
கண்படச் சாளரத்தே
யும்பசுங் கிரணத் துவாமதி தனைத்தோழி
யொளிவிருந் தொன்றநோக்கும்
ஒண்முக மெனத்தழுவ லுற்றநகை யெடுத்துமுகம்
ஒல்லென மறைத்துநாணுஞ்
செம்பசு மனத்தடிய ரேத்துமர சூர்த்தலைவ
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (3)

அறியாமை யறிவெனு மிரண்டையு மகற்றியே
அறிவினறி வருளினாலே
அறியா தறிந்ததை அகத்தே முறைப்படி
அமைத்துமப் பொருளிடத்தே

நெறியாகு மன்புவைத் துற்றவங் தக்கரண
　　நேசம்விட் டேயடங்கி
நின்றிடுதி யென்றுவே லப்பதே சிகனருள
　　நின்றுமங் நெறியிலேயே
பிரியாத சிவனும் பிரிந்துதோன் றிப்பேத
　　பிரபஞ்ச முந்தானதாம்
பெற்றியுங் தோன்றியிவை யாவுமல வாகப்
　　பிறங்கனு பவமுறுஞ்சீர்த்
திறமேவு கோமுத்தி புரமேவு செல்வனே
　　சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
　　சிறுதே ருருட்டியருளே. (4)

கருமருவு கன்மவொப் பருளிமுப் பொருளுண்மை
　　காட்டியத் துவிதநிலையிற்
கருதிலொன் றுயும்வே றுயுமுட னுயுங்
　　கலந்தமை யுணர்த்தியாளும்
பெருமருவு ஞானகுரு நாதனென் றுன்னைமெய்ப்
　　பெற்றியோர் பாடநாயேன்
பேரவாத் தூண்டத் துதிக்குமிப் பாவுநீ
　　பெற்றருள்வை எத்துணையெனில்
அருண்மருவு நீமொழிந் தருள்கவியின் வழுவிலா
　　தான்றசொல் லோடுசேர்த்தங்
கவையமைத் திட்டசொல் லும்பிணைத் தருளலா
　　லாமெனத் தேறினேன்காண்
திருமருவு கோமுத்தி புரமேவு செல்வனே
　　சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
　　சிறுதே ருருட்டியருளே. (5)

**சிறுதேர்ப்பருவம் முற்றிற்று**

## வாழ்த்து

பாங்குபெறு வேதநெறி சைவநெறி வாழ்களம்
 பவமெலாம் நீக்கிநாளும்
பரிவினோ டருள்துறைசை ஞானமுனி வரனிரு
 பதாம்புயத் துணையும்வாழ்க
ஓங்குபுக ழார்திருத் துறைசையா தீனமும்
 உவந்தென் றும் வாழ்கஅடியேம்
ஒப்பிலா ஞானகுரு வாகுமுத் தையனருள்
 உபயபத கமலம்வாழ்க
தீங்கடைவு ருச்சைவ சித்தாந்த வள்ளலாம்
 தேவைநகர் வாழ்வைசியச்
செம்மலாம் ராமநா தப்பெயர்கொள் சீமான்
 சிறக்களந் நாளும்வாழ்க
நீங்கரிய தாகவித் தமிழச்சி னேற்றியே
 நிலவுமழ கப்பவள்ளல்
நிறைசெல்வ மோடுசற் புத்திரப் பேறுற்று
 நீடூழி வாழ்கமாதோ.

**ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவடி வாழ்க**

# ஸ்ரீ சிவஞானசுவாமிகள் வாழ்த்து

**(வித்துவான் மு. ரா. கந்தசாமிப்பிள்ளை இயற்றியது)**

தென்றல் மணங்கமழ் செந்தமிழ்ப் பொதியம்
 சேர்ந்தொளிர் சிங்கைவே ளாண்குலம் உயர
அன்பொடு நல்விருந் தாற்றுதல் ஓவா
 ஆனந்தக் கூத்தனுர் அம்மயில் தேவி
என்றிவர் செய்தவத் தால்வரு விளக்கே
 இளமையில் துறவறம் ஏற்றனை உளத்தே
மன்றவா ணன்கழல் வாழ்த்திடு துறைசை
 வளர்சிவ ஞானமா தவமுனி மணியே. (1)

கண்ணெனுஞ் சைவமார் கலைத்தமிழ்க் கடலே
கவின்கொளும் அக்கடல் தோய்ந்திடும் அமுதே
எண்ணெனும் இலக்கிய இலக்கண நூலோ
டிசைபெறு பாடியும் ஆகும்நின் நூலே
மண்ணவர் அறிவிலா நோய்க்கொரு மருந்தே
வடமொழி தென்மொழி மதிவளர் ஒளியே
தண்ணெனுந் தமிழ்க்கவி மாலைநிற் கணிவேம்
தமிழ்ச்சுவை மகிழ்ச்சியால் தரித்தருள் குவையே.

## சிங்கைப் பதிகம்

**(வித்துவான் திரு. சி. வீரபாகுப்பிள்ளை இயற்றியது)**

வேத மொடுநல் லாக மத்துறை
யாவும் முற்றிய வித்தகன்
சீத மாருதம் வந்து வந்து
புகுஞ்சிங் கைப்பதி மேயவன்
நாதன் பொன்னடி நாளும் ஏத்திப்
புகழ்ந்து பாடுவம் புலவிர்காள்
ஏத மாயின நீங்கி நன்னெறி
எய்து வம்இது திண்ணமே. (1)

பொன்னங் குன்றி லிழியுந் தண்பொரு
நைப்பெ ருந்துறைப் பாங்கரில்
அன்னங் கண்படுக் குந்தண் பொய்கை
அணிசெய் யுஞ்சிங்கை நாயகன்
பன்னு பைந்தமிழ்ப் புலவிர் காளவன்
பாத தாமரை பாடுவம்
முன்னி யநலம் யாவும் நம்மவர்
முற்ற மேவுந்து முற்றவே. (2)

இலமெ னும்முறை எவ்வ மாக்கொள்
இசையி னர்பயில் சிங்கையில்
குலவி வந்துமுந் நான்கு மாணவர்க்
குய்த்துரைக்குங் குருமணி

இல்வு காத்த இளியெ னச்செல்வர்
இல்லங் காத்த புலவிர்காள்
நிலவு மாணடி வாழ்த்து வம்வளே
நிலவு நன்னிதி நேரவே. (3)

வம்மின் வம்மின் புலவிர் காளென்றன்
வாயு ரையொன்று கேண்மினோ
இம்மி யுங்கிடை யாது செல்வர்ப்
புகழ்ந்தி டிமன மோடுநீர்
செம்மை யின்றித் திரிதர் வீர்சிங்கைச்
சேவ கன்னடி வாழ்த்திறல்
இம்மை யோடுநல் லம்மை யும்நமக்
கின்ப வாழ்க்கை இசையுமே. (4)

எல்லே யற்ற இருமொ ழிக்கடல்
எல்லே கண்ட இசையினன்
முல்லே பூத்தொளிர் கொல்லே சூழ்செழுஞ்
சிங்கை யின்முக்க ளாலிங்கன்
எல்லே யில்வளக் கோக ழிக்கஞெ
ரெல்ல வன்னென நின்றவன்
நல்ல டித்துணே பாடி வாழ்த்தப்
புலவிர் காள்நன்மை நண்ணுமே. (5)

பூசு சாந்தமும் நீற தாக்கொளும்
புண்ணி யன்புகழ்க் குன்றினன்
ஆசு நீங்குதொல் காப்பியத்தின்
உரைதெ ளித்த அழகினன்
பேசு நற்றமிழ்ப் புலவர்க் கோர்வரம்
பாம்பெ ருந்தகை புலவிர்காள்
தேசு லாமலர்ப் பாதம் பாடுவம்
தீமை யாயின தீரவே. (6)

தமிழ நன்முனி யருள வந்தொரு
தண்ட மிழ்ச்சிவ ஞான நூற்
கமிழ்த மன்னசிற் றுரையும் பாடிய
வுரையும் ஒக்க அருள்பவன்

இமிழ்க டல்வரைப் பிற்ற மிழகத்
தெய்து நல்லிசைப் புலவிர்காள்
உமிழ்ந ருமலர்ப் பாதம் பாடுவம்
ஒல்லை மேலுல காளவே. (7)

கள்ள ருமலர்க் கொன்றை யானடி
காத லித்த கருத்தினன்
தெள்ளு தீந்தமிழ்ச் சித்தி யார்க்கொரு
தீவி யவுரை செய்தவன்
பள்ள நீர்ச்சுனை சூழ்ந்த சிங்கைப்
பதிய மர்ந்தநற் பாவலன்
வள்ளல் மாணடி பாடி யுய்வம்
புலவர் காளிங்கு வம்மினே. (8)

கொம்ப ரிற்குயில் கூவ மாமயில்
ஆலு காஞ்சிக் கொருமுதற்
பம்பு சீர்த்திப் புராண மின்றமிழ்
பாடி யீந்தது மன்றியே
வம்பு நாள்மலர்த் தேனிற் பாடல்
பலவ ழங்கினன் புலவிர்காள்
செம்பொற் சேவடி ஏத்து வம்பிற
விக்க டற்கரை சேரவே. (9)

இன்னும் தன்னடி போற்று வார்கட்
கிருங்கல் விப்பயன் எய்தவே
மன்னு தர்க்க மொழிபெ யர்ப்பும்
உரையும் மாண இயற்றியே
மின்னு வார்சடைக் கோக ழிப்பெரு
மான்ம லர்ப்பதம் மேயவன்
பொன்ன டித்துணை பாட வம்மின்
புலவிர் காள்புன்மை பாறவே. (10)

# ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் நான்மணிமாலை

( ஆற்றூர் A. T. இராமலிங்கம்பிள்ளை இயற்றியது )

### காப்பு

#### நேரிசை வெண்பா

தேன்மணக்குஞ் சிங்கைச் சிவஞான மாதவர்க்கு
நான்மணித்தார் சூட்டி நலமுறுவேன் — மேன்மையுறும்
ஆம்பல் முகத்தான் அடிமலரில் சொன்மலர்கள்
சோம்பலின்றி நாளும் சொரிந்து.

### நூல்

#### நேரிசை வெண்பா

சீர்தரு பாண்டித் திருநாட்டில் தென்பொதிகை
ஏர்தரு சாரலின்கண் எவ்வமறு — நீர்தரு
பாவநா சப்பதியின் பாங்க ரவதரித்தான்
தேவசிவ ஞானமுனி தேர். (1)

#### கட்டளைக் கலித்துறை

தேரும் புலமையிங் கோரேழ் தலைமுறை சித்திபெறக்
கூரும் வரங்குட மாமுனி பாற்பெறு கோதறுநற்
பேரும் புகழும் படைத்தவே ளாளர் பெருங்குலத்தில்
யாரும் பிழைக்கவந் தான்சிவ ஞான எழில்முனியே. (2)

#### விருத்தம்

முனிவர்க் கமுத மன்பால் முகமலர்ந் தூட்டா நின்ற
பனிமலர்க் கோதை கற்பிற் பகரரு வடமீ னன்னாள்
கனியினு மினிய தீஞ்சொற் கார்மயி லம்மை யீன்ற
நனிசிவ ஞான யோக நாதர்தாள் வழுத்து வோமே. (3)

## அகவல்

வழுத்துதற் கரிய மாபெருஞ் சைவம்
பழுத்தொளிர் மேன்மைப் பரம்பரை அதனில்
செல்வங் கல்வி செறிந்தர னடிக்கே
மல்கிய பத்தி வளம்பெற வோங்கப்
பொடியணிந் தக்க மணிபுனைந் திலகும்
அடியார் மாட்டு மன்புமிக் கெய்திக்
கண்டொறு மவரைக் கணக்கிலா னந்தம்
பூண்டுநின் றுடும் பொற்பமைந் தனரால்
ஆனந்தக் கூத்த ரெனப்பெய ரணிந்து
மோனந் தியானம் முறையே பயின்று
வந்தவே ளாள மரபின் சிரோமணி
சுந்தரப் புனிதர் தோள்மரு வியமயில்
அம்மைதன் சுதனு யவதரித் தின்றோர்
இம்மையின் முக்களா லிங்கரென் றருமைப்
பிள்ளைத் திருப்பெயர் பிரியமாய் வைத்தே
அள்ளிமுத் தாட வகமலர்ந் தகவை
ஐந்துறப் பள்ளி புகுந்துபல் கல்வி
சிந்தையின் தெளிவுந் திருவருட் பொலிவும்
பெறப்பயின் றெழுகும் பெற்றிமிக் குடையோய்!
அறயாத் திரையில் துறைசைமா தவர்சிலர்
மறுகிலோர் தினம்வர மற்றவ ரடிமலர்
முடிமல ராக்கொள் மூதறி வாலவ்
அடியவர்க் கெதிர்போ யன்னை பாலுய்த்
திச்சையி னமுதம் மெச்சிட வருத்தி
விச்சையு மருளும் மேம்பட மேவித்
திருவருள் நாட்டச் சிவஞா னத்தின்
உருவிற் றிகழ்ந்த வுத்தம யோகி!
பாலப் பருவம் பலகலை ஞான
வேலை படிந்து விடையவன் பதிகள்
எங்கணும் மேவி யிறைவனைத் தொழுது
மங்களத் துறைசை மடாலயம் புக்கு
நமச்சி வாயகுரு நாதனை வணங்கி
எமபய மறவே யிளையபட் டத்தமர்
பின்வே லப்ப பிரபல தேசிகர்
தம்பால் தீக்கை சைவசந் நியாசம்

இன்புறப் பெற்றிங் கெழில்சிவ ஞான
யோகியென் தீக்கா நாமமும் முற்றும்
வேகங் கெடுக்கும் வேதா கமங்கள்
உரைக்குஞ் சரியை கிரியா யோகம்
விரிக்குநூ லனைத்தும் விளங்கத் தெளிந்தும்
உண்மையைக் கண்டா ருரைபண் டார
உண்மைச் சாத்திர வுட்பொரு ளியாவும்
அஞ்ஞா னத்தை யகற்றிமெய் யருளால்
மெய்ஞ்ஞா னத்தை விளக்குமஞ் ஞான
சாரிய ருணர்த்தச் சந்தேக மறவே
உரிமையிற் கேட்டு முவந்துசிந் தித்தும்
தெளிந்துசித் தாந்தச் செந்நெறி தேறித்
தெளிந்த வதீதத் திருவாழ் வெய்தி
விளங்கிய மாதவ ! வினையிற் கிடந்தே
உய்நெறி யறியா துழலுவேற் கிரங்கி
மெய்ந்நெறி காட்டி விரைந்தினி தருளே. (4)

## நேரிசை வெண்பா

அருளாளர் கண்ணுதலா ரானர் குரவர்
இருமொழிக்கு மென்பாரே யாமும்—இருமொழியுங்
கற்றுநிலை கண்டல் கவினென்றே சிங்கைநகர்
நற்றவநீ கற்றாய் நவில். (5)

## கட்டளைக் கலித்துறை

நவிலும் பலப்பல நூலுரை யாற்றியிந் நானிலத்தில்
கவினுந் தமிழ்க்கலங் காரங்கள் செய்தனை காஞ்சிநகர்ச்
சிவனுக் குரைத்த புராணத் தருமையைத் தேர்ந்தவர்கள்
இவருக் கெவர்நிக ரென்பார் சிவஞான இன்னமுதே. (6)

## விருத்தம்

அமுதாந் தமிழி னிலக்கியமும்
அதற்கு நிகழ்த்து மிலக்கணமும்
குமுத மலர்வாய் மலர்ந்திலகக்
கூறுந் தருக்கஞ் சித்தாந்தம்

இமையா நாட்டத் தமரர்குழாம்
இறவா துறுவான் தினமயிலும்
அறுதாப் பொழியுஞ் சிவஞான
அரசே யுன்தாள் அடைக்கலமே. (7)

**அகவல்**

கல்லுடன் கட்டிய கல்லின் மிதந்து
நிலமார் சைவ நன்னெறிப் பெருமை
புலவோ ருலகோர் புறச்சம யத்தோர்
அலகிலா மன்பதை யறிவா னுணர்த்திய
அருட்டிரு நாவி னரசைக் கரையில்
இருத்திய தலத்தி னிலகிய வவையில்
புலமையும் நிலைமையும் பொருந்துமோர் தனிகர்
பொலன்நூ றிட்டவோர் பொற்கிழி வைத்துக்
'கரையேற விட்ட' வெனக்கடை யடியாய்
உரைத்தொரு கவியை நிரைத்தவர்க் கக்கிழி
எனச்சபை யுற்று ரியாவரு மயங்க
உணற்கரும் வறுமை யுற்றவோர் விப்பிரன்
வேட்டற் கிரங்கி விடிப் பொழுதில்
தீட்டியோர் கவியை யீந்தருள் புரிந்த
புலமைமிக் குடைய போதக வள்ளால்!
புலமைக் கம்பன் பொறித்தவோர் கவிக்குப்
பலப்பல குற்றம் பகர்ந்துவை ணவர்கள்
கொண்ட செருக்கைக் குலைத்தவர் வேண்ட
மண்டிய சங்கை மாற்றியோர் விருத்தி
பின்ன ரியற்றிப் பேரா தரவில்
இன்ன லொழித்த இலக்கிய வடிவே!
கச்சிப் புலவர்கள் கழறிய வாதம்
விச்சைமா னவர்கொடு வென்றவ ரோடச்
செய்தமா தவனே! சிவஞா னப்பேர்
எய்திய முனிவநின் னிணையடித் தொழும்பே
எய்துமா றெண்ணி யீண்டுனைப் பரவ
வந்தவென் புதுமை மலக்குறும் பகலச்
சிந்தையிற் கருணை செறிதுவைத் தருளே. (8)

### நேரிசை வெண்பா

வைப்பாருஞ் சித்தாந்த மாபா டியப்பெருமை
ஒப்பாதா ரீண்டு முளரோகாண் — எப்போதும்
சைவத்தி னுண்ணறிவைத் தாராய் சிவஞானச்
சைவமுனி யேயெனக்குத் தான் (9)

### கட்டளைக் கலித்துறை

தானுக வித்தியா தானம் புரிந்துபல் சாத்திரமும்
ஆனுத மாணவர் பன்னிரு பேர்களுக் கையமறக்
கோனுக வீற்றிருந் தோதிய ஞான குருமுனிவன்
தேனுருஞ் சோலைத் துறைசைச் சிவஞான தேசிகனே.

### விருத்தம்

தேசிக னுகி வீற்றுச் செந்நெறிச் சீட ரோடும்
ஆசறு மலைய வெற்பின் அகத்திய முனிவர் போல
ஏசில்செந் தமிழுஞ் சைவ சித்தாந்த நெறியு மெங்கும்
மாசறப் பரப்பிக் காத்த மாதவ முனிதாள் போற்றி.(11)

### அகவல்

போற்றுதற் குரிய புராதனக் காப்பியக்
காற்றரு சூத்திர விருத்தியும் வகுத்து
இலக்கண விளக்கச் சூரு வளியே
புலவர்சங் கரநமச் சிவாயர்முன் பொறித்த
இன் னூ லாகும் நன் னூ லுரையின்
எண்டகு திருத்த மெனவோர் மூன்றும்
இலக்கணச் சார்பி லியற்றின நூல்கள்
இலக்கிய வகையை யியம்பவென் றூலோ
காஞ்சிப் புராணக் கவினுமுற் காண்டம்
முதல்வர்சோ மேசர் முதுமொழி வெண்பா
இதமுறு கலைசை இளைசை குளத்தூர்ப்
பதிற்றுப்பத் தந்தாதிப் பாவினம் மூன்று
செப்பறை ராசை யகிலாண்ட தேவி
திப்பிய கச்சியா னந்தருத் திரேசர்
இவர்க்குப் பதிக மிரண்டாம் பிள்ளைக்

கவிகள் கலைஞ்சக் கண்டீதி குளித்தார்
அமுதாம் பிகையிவர்க் காக்கிய விரண்டே
கச்சியா னந்தக் களிப்பொரான் ருகுந்
திருவே கம்பர் திருமுல்லை வாயில்
இருபெருங் கடவுளர்க் கிரண்டாந் தாதி
பஞ்சாக் கரதே சிகர்க்குமா லைப்பா
அஞ்சக் கரனு ரருட்டிருத் தொண்டர்
நாமக் கோவை யிராமா யணச்செயுள்
ஏழுறு சங்கோத் தரவிருத் தியெனு
ஆம்நூல் மூவைந் தாக வருளினை
தருக்கங் கிளத்திற் றருக்கசங் கிரகமும்
அன்னம்பட் டீயமு மெனவரை குன்றா
மலஞ்சிதைத் துய்ய வைக்குஞ் சித்தாந்த
நந்நூல் விவரம் நவிலப் புகினே
தேவரும் மெச்சுஞ் சிவஞான பாடியம்
எவ்வரும் போற்றுபோ தச்சிற் றுரையே
சித்திப் பொழிப்புரை சித்தாந்தப் பிரகாசிகை
என்னையிப் பவத்தி லெனுஞ்செயுள் தனக்குச்
சொன்ன சிவசம வாதச் சொன்மறுப்
பெடுத்தெனுஞ் சொல்லுக் கிட்டகுப் பாயம்
தொடுத்தபுன் சமயச் சூட்சிக ளறுக்குஞ்
சிவசம வாதத் தெரு வுரைமறுப்
பென்னூ லேழா யியற்றினை பெரியோய்!
அரன்பரத் துவமுறை அர்தத்தர்ச் சாரியார்
உரைத்திடு சுலோக பஞ்சக வுரைக்குச்
செந்தமிழ் மொழியிற் செய்மொழி பெயர்ப்புந்
தந்து சிவதத் துவவிவே கமுமாய்
ஈட்டினை சமயநூ லிரண்டா கவுமே
நாட்டின் சாம்பிர தாயங் குன்றார்
பித்தாந்தத் துற்றுப் பிதற்று வன்னன்று
சித்தாந்த மரபு கண்டன கண்டனம்
முதலிய நூல்கள் மொழிந்தனை பலவே
நுதலிய முறையின் நுவலரு விதமாய்
இத்தனை நூல்க ளியற்றுதற் காற்றல்
முத்தர்கள் வழுத்தும் உத்தமத் துறைசைச்
சித்த! மாதவச் சிவஞான வள்ளால்!
எவர்பாற் பண்டித்தனை யின்னருட் பிழம்பாந்

தவமுறு நமச்சி வாயகுரு வின்
அருட்கடல் படிந்த வற்புதத் தாலோ?
திருவா ரக்குரு பரம்பரை சிறந்த
பின்வேல்ப்ப தேசிகர் பெருமான்
றன்வயி னுனக்குத் தங்குமன் பாலோ?
ஆல நீழ லமர்ந்தவக் கடவுள்
சால வளித்த தனிப்பெருங் கருணையோ?
முன்னைப் பவத்தவம் முற்றி முதிர்ந்தது
பின்னே கைக்குவந் தெய்திய தேயோ?
அன்ன மனமயி லம்மையா னந்தர்
என்றுே றனரிவற் பயத்தற் கெனுஞ்சொல்
ஈட்டினை யவர்க்கிவ் விருநில வரைப்பில்
கேட்டினைப் புரிதலிற் கிளர்ச்சிமிக் குடையேன்
பாட்டினைக் கேட்டுப் பரிந்தருள் செய்ய
நாட்டமுங் கொண்டு நலனருள் வாயோ
எனமிக வஞ்சி யிருந்தன னிதுகா
ருயினும் மாதவ! அருளே யுருவாய்
மேயினை யதனுல் வினையினேன் றன்பால்
இரங்குவை சிறிதென வெண்ணித் துணிந்தே
கரஞ்சிரங் கூப்பிக் கண்ணீர் ததும்பி
நாற்பா வினமலர் நார்கொடு தொடுத்துன்
காற்பாற் சாத்தக் கருதினே னதனுல்
துறைசையா தீனத் தூயமா தவனே!
நிறையருள் புரியு ரேயம்வைத் தருளே. (12)

### நேரிசை வெண்பா

அருமைத் துறைசையி ஞதீனத் துக்குந்
தருமைக்கும் மேற்றலைவர் தஞ்சைப்—பெருநாட்டின்
உற்ரு ரெனினு முவர்பெருமை தென்னுடு
பெற்றவிரு மாதவராற் பேசு. (13)

### கட்டளைக் கலித்துறை

பேசுஞ் சிவகரு ணைப்பிர வாகப் பெரும்புனலே
மாசுங் கரிய மலமும் படத்தினம் வாரியுண்டு
தேசுந் திருவும் படைத்தொளிர் ஞான சிவமுனிவன்
காசும் பெருதப் புனலெங்குஞ் சிந்திக் களித்தனனே.

## விருத்தம்

களிக்கும் புலவர் தமக்கரசே
கருணை பொழியுந் திருமுகத்தில்
தெளிக்குந் தவளத் திருநீறு
செழிக்கு மடியார் திருநிதியே
பளிக்கு நிகரும் பொடியணிந்த
பவள மேனிப் பரனடிக்கீழ்
ஒளிக்குந் துறைசைச் சிவமுனியே
உண்மை ஞான மூவந்தருளே. (15)

## அகவல்

அருள்பெரு நாட்டத் தமர்ந்தபன் னிருவரில்
மருளறக் கற்ற மாணவர் தொட்டிக்
கலைச்சுப் பிரமணி முனிவருங் கவிக்குச்
சக்கர வர்த்தி யெனப்புகழ் தாங்கிய
கச்சி யப்ப முனிவரு மிலக்கண
நிச்சய நிபுண நிகரறு சிதம்பர
நாத முனிவரும் நலமுறச் சூழப்
போத வுணர்ச்சி புகட்டிய துறைசை
மாதவச் சிவஞா னப்பெரு யோகி
பாதத் துணையே பற்றுக் கோடி
அன்னார் கருணை யருட்டிரு வுருவை
உன்னினின் றவர்செ யுண்மைப் போதநூல்
பயில்பாக் கியமுன் பண்ணிய தவத்தால்
பெற்றவர் வீடு பெற்றவ ராவரே. (16)

## நேரிசை வெண்பா

ஆமா றருள்பெறுதற் கண்ணால் சிவஞானக்
கோமானே அஞ்செழுத்தைக் கோதகல — நாமாறி
மாறிப் பழகிவரின் வாய்க்குமன் றேமுத்தி
கூறுவா யுண்மைக் குறிப்பு. (17)

### கட்டளைக் கலித்துறை

குறிவாய்ச் சிவன்றனைப் பாவித்து
நித்தமும் கோவினைந்தும்
பொறிவாய் கரணங்கள் பொத்திநின்
ருட்டிநற் புத்தமுதம்
நெறிவா யருத்தித் துதிபல
வோதில் நிமலனருள்
பெறுவா யெனப்புகன் ருன்சிவ
ஞானப் பெருந்தகையே. (18)

### விருத்தம்

பெருந்தகைசேர் வெண்காட்டுப் பிஞ்ஞகனார்
திருவருளால் பிறந்தா காயத்
திருந்துவிமா னத்திழிந்த பரஞ்சோதி
யாரருள ஈரா ருகப்
பொருந்தியசூத் திரத்தாலே மெய்கண்டார்
அருளியபோ தத்தி னுண்மை
விரிந்திடச்சித் தாந்தமா பாடியநூல்
வகுத்தமுனி வேந்தே போற்றி. (19)

### அகவல்

போற்றுவார்க் கருளுவை புலமையும் போதமும்
ஏற்றுவா கனர்க்கே யியற்றுவை சொற்பணி
நீற்றினை யணிந்து நிருமலன் கண்ணின்
றூற்றுநீர்த் துளியா யுறுமணி வடங்கள்
போற்றியே புனையும் புனிதமார் மேனியாய்!
வேற்று விகார விரிபுன் சமயச்
சேற்றில் வீழாது செம்மலர் நோன்றாள்
போற்றுஞ் சைவப் பொலிவுடை யாரைப்
போற்றுங் கருணை பொறையரு ளுடையாய் !
அன்புடை யாரை யகப்படுத் திடுவான்
இன்பார் மொழிக ளெழுமெழில் வாயாய்!
துன்பார் பிறவி தொலைக்குமெய்த் துறவு
பொன்போற் போற்றும் புண்ணிய முடையாய்!
சைவமெய் கண்டான் சந்நிதி தழைப்பச்

சைவத் துறைசை சார்ந்தனை மாதவச்
சிவஞான வள்ளால்! சிறப்புறு மிளமையில
பவஞான மோதிப் பாதியா வண்ணம்
துறவுநீ பூண்ட துணிவும் தீரமும்
அறவோர் தேர்வ ரன்றியா ரறிவார்
பொன்மண் பெண்ணெனும் போக நுகர்ச்சி
உன்னி யெந்நாளு முழலுவே னுய்வான்
நன்னெறி காட்டி நலனருள் வாயே. (20)

### நேரிசை வெண்பா

அருளார் திருவடிக்கே யன்பாற்றுஞ் சீலர்
மருளா வகையருளும் வண்மைத் – தெருளார்
துறைசைச் சிவஞானத் தூயோனே அன்பால்
கறைசெய் மனத்தனையுங் கா. (21)

### கட்டளைக் கலித்துறை

காக்கும் புகலித் திருஞானப் பிள்ளை கவுணியர்தம்
ஆக்கம் பொலிய வவதரித் தானது போலரனார்
நோக்கம் பொலியும்வே ளாண்மர பந்நாளி னேற்றபய
னாக்கப் பிறந்தான் துறைசைச் சிவஞான வண்ண
[லுமே. (22)

### விருத்தம்

அண்ணு மடியார் பவப்பிணியை
அறவே தொலைக்கு மருமருந்தே
அவர்கண் மனம்விட் டகலாத
அன்பி னுருவே சிலைபுரையுந்
திண்ண மனத்தால் பொறையிரக்கஞ்
சீவ கருணை சிறிதுமிலார்
சிந்தை தனக்கு மெட்டாது
சேய்மை யாகி நிற்பவனே
வண்ண மலர்த்தாள் தினம்பரவி
வாழ்த்துங் கவிஞர் மாணவரை
வளமார் போத வமுதருத்தி
மயக்க மகற்றி வாழ்விக்குந்

கண்ணே துறைசைச் சிவஞானக்
கலைதேர் முனியா மாதவனே
கடைய னேனை யகமகிழ்ந்து
கருணை சுரந்து காத்தருளே. (23)

**அகவல்**

காத்தருள் செயுமுன் கருணைவாய் விண்டு
மாத்தலம் புகழ வகுத்தமா பாடியம்
பார்த்தவ ரெல்லாம் பரியாக மெய்தி
ஆத்திக ராகி யரனே பரமெனத்
தோத்திரஞ் செய்தும் தொன்மையா கமமாஞ்
சாத்திர விதியில் தவறுத லின்றி
அருச்சனை புரிந்து மஞ்சக் கரத்தை
உருக்கொடு செபித்தும் யோகியா யுற்றும்
திருக்கிளர் ஞானச் செல்வராய் மேவித்
தானே பிரம மெனச்சா தித்தவர்
ஈனரா யோடத் திசைதொறு முய்த்தனர்
மாதரார் தோளை மருவுமவ் வின்பே
ஓதரும் வீடென வுரைப்பவர் நாணிப்
போதர வோட்டிப் புகழ்க்கொடி யோச்சினர்
நாத்திக ரோவுரை நாட்டுதற் கஞ்சி
மூத்திரக் குழியுண் முங்கிக் குளிக்கப்
புரிந்தன ராகிப் பொலிந்தன ரதனால்
திருந்திய துறைசைச் சிவஞான தேவே!
அருந்தவன் நீயே யருமறைப் பொருளைக்
கரந்தரு நெல்லிக் கனியென எவர்க்கும்
பொருந்துறக் காட்டும் புனிதனு குவையே. (24)

**நேரிசை வெண்பா**

குவையின் முரட்டிரும்புங் கோதிலாப் பொன்னாய்
உகளுமா வேதித்த லொப்பத் — தகையார்
அருளாற் சிவஞான அண்ணல்நீ யன்றோ
இருள்கடியு மெய்ஞ்ஞான, என்று (25)

### கட்டளைக் கலித்துறை

என்றுன் றிருவருட் காளாகி
ஞானமுற் றிவ்வுலகில்
பொன்றும் பொருளிடத் தேவைத்த
ஆசையைப் போக்கிடுவேன்
வென்றும் புலப்பகை வேகங்
கெடுத்து வினைகளெனுங்
குன்றுந் துகளாப் பொடிசெய்த
ஞான குருமணியே. (26)

### விருத்தம்

மணியி னொளியே துறைசைக்கண்
வாடா தொளிரு மணிவிளக்கே
அணிசெய் தமிழ்மா தகங்குழைய
அன்பாற் பணிகள் பலபூட்டும்
பணிமிக் குடைய பண்டிதனே
பரம ஞானம் பருகியதை
மணிவாய் திறந்திங் குலகுய்ய
மறித்தும் வார்த்தாய் வளனன்றே. (27)

### அகவல்

வளமார் பொருநை வண்புனல் குடைந்து
களித்துக் குரங்கினக் கவியுடன் கொஞ்சி
உயர்தரு விண்மீ துன்னிக் குதித்து
நயப்பல மருந்தியும் நதிவீழ் நீரில்
கயல்மீ னம்மா கணக்கிலா வெண்ணில்
அயிரை யயின்று மன்பர் புரிபவம்
புண்ணிய மாகும் பொற்பினைத் தேற்றும்
பாவ நாசப் பழம்பதி யெனுநகர்க்
கருகில்விக் கிரம சிங்கையம் பதியே
கருவினி ஒழிக்கக் கருதிய பதியாக்
கொண்டுமுன் தோன்றிக் குறுமுனி புரையப்
பண்டைத் தவத்தால் பரனடிப் பத்தி
மண்டிச் செறிய வளத்துறை சைச்சிவ
ஞான முனியாய் நானில வளாகத்
தெங்கு மூலாவி யீனமாஞ் சமயப்
பங்கத் தருக்கனைப் பறித்தெறிந் தருளரும்

படாமுக மிலகப் பரசிவா கமமே
மணியாய் மருங்கில் வயங்கித் தொனிக்கத்
தணியா வூக்கிற் சைவ மதம்பொழிந்
தருளிய சைவ அற்புதக் களிறே!
இருவினைப் படுவே ளிடுபசு போதக்
கவளம துண்டு களித்துக் கருணை
வெள்ள மாமதம் விருப்புடன் பொழிய
உள்ளம திரங்கி யுவந்தினி தருளே. (28)

### நேரிசை வெண்பா

இனிய பொருள்கனியு மின்றமிழில் ஞானங்
கனியக் கவியுரைக்குங் கல்விக் — கனியே
துறைசைச் சிவஞானத் தூமுனியே நீயேன்
அறையுந் தமிழ்கேட் டருள். (29)

### கட்டளைக் கலித்துறை

அருளுற்ற ஞானம் மருளற்ற போதே
அடைவரெனத்
தெருளுற்ற மேலவர் செப்பிய வுண்மை
தெரிந்தலவோ
சுருளுற்ற பூங்குழற் கோதையர் காமத்
தொடக்கறுத்தான்
பொருளுற்ற ஞான வுருவுற்ற மாதவப்
புண்ணியனே. (30)

### விருத்தம்

புண்ணியப் பொலிவால் புலப்பகை தடிந்தாய்
பூரண மதியெனத் திகழ்ந்தாய்
நண்ணினை நமச்சி வாயசற் குருவை
நலமுற அருட்கடல் படிந்தாய்
தெண்ணிலா அணிந்த செஞ்சடைப் பகவன்
திருவடி நீழலி லமர்ந்தாய்
தண்ணிய ஞானத் துறைசைமா தவனே
கருணைவைத் தெனையுமாண் டருளே. (31)

### அகவல்

ஆண்டைப் புலத்தி னமரர்க்கு மெட்டா
மாண்டரு சேவடி வழுத்துறும் பேற்றால்
ஈண்டுனக் கன்பெ னிதயத் திலக
மற்றதைக் கொண்டுன் மலரடிப் பேற்றைப்
பெற்றுற மிக்க பிரியம்வைத் தென்றும்
உன்னருட் பெருமை உரைப்பவர் சங்கத்
தின்னல மெய்த எண்ணியா னுறுதல்
அன்னவர்க் கையவுன் னருள்நின் றுணர்த்த
என்னையோர் பொருளா எண்ணியப் பெரியார்
சிலர்குறிப் பாகச் செய்தபே ராணை
நலனுறச் சிரமேல் புலனுற ஏற்றுன்
பொன்னடிப் போதில் பொருந்துமா றடிமை
சொன்ன இந் நான்மணித் தொங்கலை யேற்றுப்
புன்னெறிக் கண்ணே பொழுதுபோக் கிடுவேன்
றன்னைநன் னெறியில் சாருமா றருளி
நவைகளைந் தடியார் நடுவுற இருத்திச்
சிவமெனும் வித்தையென் சிந்தை யிற்பதித்
தவமெனுங் களைகள் அணுகவொட் டாது
தவமெனுங் கிருடிகன் றனைக்கொடு பறித்து
சைவப் பைங்கூழ் தழைத்துற அருளி
மெய்ப்பய னுகும் வீடாம் விளைவு
சைவத் துறைசைத் தவஞான வள்ளால்!
கைவரச் செய்தலுன் கடனு கும்மே. (32)

### நேரிசை வெண்பா

கடல்போல வாய்திறந்து கத்துஞ் சமய
அடலொடுக்கி ஆண்ட வரசே — விடமுண்ட
கண்டத்தான் காலே கதியன்றே ஞானத்தை
உண்ட சிவமுனியே யோது. (33)

### கட்டளைக் கலித்துறை

ஓதுங் கலைகள் பலவுணர்ந் தாலுமிங் குண்மையிலே
காதும் புலன்களை வென்றரன் பாதங் கருத்திருத்தாப்
பேதைக் குறுபயன் என்கொல் துறைசைப்பிறங்குசிவ
மாதவ ஞான முனியே உரைத்தருள் வாய்மையையே.

### விருத்தம்

வாய்மையெனும் கவசத்தை வாயிற் பூண்டு
வண்மையெனும் படைக்கலத்தைக் கரத்தி லேந்தித்
தூய்மையெனும் வாரிதியின் மூழ்கி உள்ளத்
துறவென்னுங் கலைதனைப்போர்த் துலகி லெங்குந்
தீயருற வெனுங்குழியில் வீழா தென்றுஞ்
சித்தாந்தச் செந்நெறியிற் சென்ற செல்வன்
மாயையெனும் வியாக்கிரத்தின் வாய்ப்ப டாத
மாதவனுஞ் சிவஞான வள்ளல் தானே. (35)

### அகவல்

தானே யருள்வன் தனிப்பர முத்தி
ஆனே றுகைத்த அம்பல வாணன்
கோனுஞ் சைவ குலமர போங்கச்
சிங்கை யுதித்துத் திருவா வடுதுறை
கோனுக் குருவா தீனமாக் கொண்டுல
கெங்குஞ் சைவ இன்னொளி யிலகப்
பொங்கிய ஞானம் பொழிந்து திகழுஞ்
சிவஞா னப்பேர் மாதவச் செம்மல்
தவமார் கமலத் தண்ணடி மறவா
அன்புடைச் செல்வ ராமடி யவர்க்கே. (36)

### நேரிசை வெண்பா

கேடே புரியுமக்கள் கெட்டாற் பழியுலகங்
கோடா துரைக்குங் குரவர்க்கே — வீடார்
சிவஞான மாதவனான் தீநெறியுற் றாலோ
அவமானம் யார்க்கிங் கறை. (37)

### கட்டளைக் கலித்துறை

அறையுஞ் சிவாகம வுட்பொருள் நுட்பங்க
ளாய்ந்துலகில்
நிறையு முயிர்க ளெளிதுணர்ந் துய்வான்
நிறுவியவா
கறையு மரவு மணியும் புராரியின்
கண்ணழலான்
மறையு மநங்கனும் வந்துனைச் செய்வதென்
மாதவனே. (38)

## விருத்தம்

மார்தவப் பயனு யன்பர்
　　மயலறுத் தருள்செய் வானும்
கோதில்மெய்ஞ் ஞானந் தன்னைக்
　　கொடுத்தருள் புரிவான் றானுந்
தீதறு துறைசை மேவுஞ்
　　சிவஞானச் செம்ம லென்பார்
மூதறி வுடைய சீவன்
　　முத்தரா முனிக ளம்மா. (39)

## அகவல்

அம்மவ்வ் வுலகில் அருந்தவத் தோரை
இம்மையிற் காண வியாதினும் அரிதாய்
மறையுமென் றுலகில் வழங்கிடும் மாற்றம்
மறைபட மாற்றி வந்தவ தரித்த
அருந்தவ ரேறே! அற்புதத் துறைசை
பொருந்திய ஞான புங்கவ! மாதவ
விருந்தினர் களித்து மேம்பட வாசி
புரிந்திட வொழுக்கம் பொறையரு ளாதி
இளமைப் பருவத் தெய்திய ஏந்தால்!
வளமைச் செந்தமிழ் மாண்புறப் பயின்று
கல்லுங் கரையக் கற்பனை தொடுத்துச்
சொல்லுங் கனியத் துகளறு கவிகள்
செய்தரு ளாற்றல் சிவஞான வள்ளரல்!
உய்வா னுலகம் உயர்சிவ ஞானப்
பனுவல்கள் இயற்றிய பாவல ரேறே!
கனிவுறு போதக் காட்சிகட் கெட்டா
ஞான வுருவின் நலந்திகழ்ந் தோங்கி
மோன நிலையே முனைப்பறுஞ் சமாதி
யுற்றுநற் றினமாய் உறுவிசு வாவசு
வருடமே டத்தின் மருவுமா யிலிய
நன்னாள் ஈசன் நற்பத மேவினை
தென்றடு செய்தவத் திறத்தின் சீரே. (40)

நான்மணிமாலை முற்றிற்று

# தோத்திரப் பாடல்கள்

யாழ்ப்பாணத்து வண்ணைநகர்
திரு. சுவாமிநாத பண்டிதர் இயற்றியது

## தரவும் தாழிசையும் பெற்று வந்த கொச்சகக் கலிப்பா

### தரவு

உலகெலாம் புகழோங்க உண்மையெலாம் எடுத்துரைத்தெம்
அலகிலாத் தமிழ்முனியென் றறிஞரெலாம் ஏத்தெடுப்பத்
தென்றிசையின் பெருந்தவத்தால் றிருவவதா ரம்புரிந்து
மன்றினிய தாய்ப்புரைய அருளிருத்தும் ஒருபெருமான்
வடமொழியும் தென்மொழியும் மற்றையுள வாமொழியும்
கடல்குடித்த முனிநேரக் கண்டருளுஞ் சித்தாந்தி
பங்கயத்தில் உறைவோனும் பசுங்கடலில் துயில்வோனும்
புங்கவரும் உணர்வரிய போதப்பே ருரைசெய்த
தவமோன பெருமையெலாம் நிலமொழியச் சாலாத
சிவஞானப் பெருமுனியாந் தேவே! நீ கேட்டருள்க.

### தாழிசை

ஆக்கமெனும் உயிர்ப்போதம் அடுவதுநந் துறையென்றே
நீக்கரிய தண்துறையே நின்குடியாக் கொண்டனையே.

தமிழ்தமிழென் றெல்லோருந் தாலசைக்கும் இம்மகிமை
அமிழ்தம்போல் நீயளித்த அறத்தருளின் பிச்சையதே.

எச்சமயத் தெவர்தாமும் நின்வாய்மை எண்ணிலரேல்
பிச்சரவர் எப்பயனும் பெற்றிலாப் பெற்றியரே.

தீந்தமிழும் பாடியமாஞ் செவ்வணியைப் பூண்பதற்கிங்(கு)
ஈந்தவனும் நீயன்றே இத்துணையோ நின்பெருமை.

ஒப்பதிகம் பெறற்கரிய உன்தாட்குப் பன்முறையாஞ்
செப்பமுற மிகுவணக்கஞ் செய்தரோ உய்குவமே.

### ஸ்ரீ வாசுதேவ முதலியார் பாடியது

வடிவெழுத்தும் பெயரெழுத்தும் தன்மையெழுத்
துந்தெரித்து வழக்கிற் காட்டி
முடிவெழுத்தி னுக்கவே றிலயத்தாற்
பொருட்பகுதி முற்றுங் காட்டி
உடலெழுத்தும் சார்பெழுத்தும் உயிரெழுத்தும்
அயன்முதலோ ரெழுத்திற் காட்டி
மடமையறுத் தருள்துறைசைச் சிவஞான
சாமிஇரு மலர்த்தாள் போற்றி.

—*திருமாணிக்குழிப் புராணம்.*

### சித்தாந்தப்பேராசிரியர் ந. சிவகுருநாதபிள்ளை பாடியது

அருந்தமிழும் ஆகமமும் அறியாத அடியேனும்
திருந்துமுய ராகமத்தின் முடிவாய சித்தாந்தம்
பொருந்துமுறை யாலுணரப் புரிந்தருளும் துறைசைவளர்
பெருந்தவத்துச் சிவஞான முனிவரனும் பிரான்போற்றி.

—*சிவஞான சித்தியார் ஆராய்ச்சி.*

### தூத்துக்குடி, இராம. அண்ணாமலைச் செட்டியார் பாடியது

பாடியத்துள் தலைசிறந்த பாடியமாம் சிவஞான
பாடியத்தை இனிதருளிப் பல்கலையின் சிக்கறுத்து
வீடுதரும் பேறருளும் வியன்துறைசைச் சிவஞான
நாடறியப் புகழ்முனிவர் நற்கழல்கள் நயந்திடுவாம்.

— *அண்ணாமலையார் அரிய கட்டுரைகள்.*

### பூவை, கலியாணசுந்தர முதலியார் பாடியது

பித்தாந்தப் புறச்சமயப் பிணக்கறுத்துப்
பேருவகை பிறங்கி மல்க
முத்தாந்தம் ஈதெனவே மெய்கண்டார்
சாத்திரத்து முடித்துக் காட்டி

சித்தாந்தம் யாவருக்கும் ஊட்டுவிப்பான்
　　துறைசையின் நிலேத்த எங்கள்
சித்தாந்த பானுஎனும் சிவஞான
　　முனிவரர்தாள் சிந்தை செய்வாம்.

—*திருவான்மியூர்ப் புராணம்.*

**இலக்கணம் சிதம்பரநாத முனிவர் பாடியது**

சித்தாந்த சூத்திரபா டியம்புரிந்த
　　சிவஞானச் செல்வ ராதி
பத்தர்கடாம் பணிதிருச்சிற் றம்பலதே
　　சிகர்துறைசைப் பழமை மேய
முத்தராம் அம்பலவா ணக்குரவர்
　　பணியுநமச் சிவாய மூர்த்தி
கொத்தார்ந்த மெய்கண்ட பரம்பரைவாழ்
　　தேசிகர்தாள் குறித்து வாழ்வாம்.

—*திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்.*

**ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் திருவடி வாழ்க,**

## காஞ்சிப்புராணம் - சிறப்புப்பாயிரம்

அருட்பணிக் குரிய மகேச்சுரர் முதலா
நால்வருந் தருகளன் றறைய
மருட்பகை துமிக்குங் காஞ்சிமான் மியத்தை
வழங்குதென் மொழியினு லுரைத்தான்
கருப்பகை யிரிக்கும் ஞானமு மேனைக்
கலைகளும் கரிசறப் பயின்ற
மருப்பொழி லுடுத்த ஆவடு துறையில்
வாழ்சிவ ஞானமா தவனே.

*—ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்.*

## பஞ்சாக்கரதேசிகர் அந்தாதி

தேசிக நாதன் சிவஞான தேவன்செங் கைத்தலம்முன்
வீசிநின் றாடிய அம்பல வாணன் வியனுலகம்
பேசிய பஞ்சாக் கரவன் பிறங்கருள் தாள்மலரைக்
கூசிநின்(று) ஏத்திய மாதவத் தார்க்குஎன் குறைஉளதே.

*—ஸ்ரீ கச்சியப்பமுனிவர்.*